ஓம் பரப்பிரம்மணே நம:

64-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.)



| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸஹு ஆனிமீ | இதழ் 75. |
|---|---|---|
| Vol. 7. | 1932-ம்ஹு ஜூன்மீ | No. 75. |




"ஞானமறிந்தோர்க்கு நமனில்லை." உண்மைபற்றிய சாஸ்திரத்தில் மெய்யுணர்வை நாடு. அந்த அந்த சாஸ்திரம் எக்கருத்தினை நோக்கி அமைக்கப் பெற்றுள்ளதோ, அக்கருத்தின் வழி அமர்ந்து அதைக் கற்கக்கடவாய். அதின் பயன் என்ன எனப் பார். அன்புவாய்ந்த சிறு நூல்களும், ஆழ்ந்த பெருநூல் போலப் பிரியமாய்ப் படிக்கற்பாலது. அப்புஸ்தகத்தின் கண்ணுள்ள உண்மைப் பொருளை உன்னிப் பார். அதுவே உன் மனத்தைக் கவரட்டும். கல்விச் செருக்கை விடு. பக்தி, பணிவு, நம்பிக்கை கொள்ளு. சந்தேகங்களைக் கூச்சமின்றி வினவு. சான்றோர் வார்த்தையைக் கேள். விடையின்றேல், மறைவாகவும், உருவகமாகவும், மூத்தோர் செய்திருக்கும் உபதேசத்தில் கிலேசப்படாதே. உண்மையின்றி அவர் உரையார். காரியமின்றி அவர் சொல்லார்.

ஃ

"விட்டேனுலகம் விரும்பேனிருவினை" யென்று ஆசைக்குட்படாமல் அதனை வென்றால் மனச் சமாதானம் அமையும். உலக விஷயங்களில் அழுந்தி ஆசைகொண்ட மனதைச் சுகம் அணுகாது. தபசில் பற்றிய தாகமுள்ளோர்க்கு அந்தச் சாந்தி உண்டாகும். தனக்குள்ளே ஒழிவு பெறுதவன் சோதனைக்குள்ளாவான். அற்ப விஷயங்களிலே அவன் சஞ்சரிப்பான். 'விஷயங்களின் வழிச் சென்றேன்; சுகம் நாடினேன்; நாடின சுகம் கிட்டவில்லையே' என்று துயரமடைவான். உன் உள்ளத்தைக் கண்டவர்க்கெல்லாம் காட்டாதே. இறைவனிடம் பயம், பக்தி பாராட்டுவோரிடம் உன் குறையைச் சொல்லு. ஈசன் சந்நிதியையும், தேவர்கள் சிநேகத்தையும் விரும்பு. ஒருவன் ரூபத்தைப் பிறர் அறி

யாமலே உலகில் அவன் கீர்த்தி எங்கும் பரவிப் பிரகாசிக்கும். அவனை நேரில் கண்டாரேயாகில் அவன் புகழ் மங்கிவிடும்.

ஃ

"அணுவிலணுவாக யிருந்தானை யறிவதே வேதாந்தம்" வேதம் என்பது யாதொரு புஸ்தகத்தையும் குறிக்கமாட்டாது. 'வேதம்' என்பதற்கு 'ஞானம்' என்றும், 'அந்தம்' என்பதற்கு 'முடிவு' என்றும் பொருள். ஆகலின் வேதாந்த மென்பதற்கு 'ஞானமுடிவு' என்பதே பொருள். அந்த சாஸ்திரம் "முடிவு" இன்னதென்பதையும், அந்த முடிவை யடையும் வழி இன்ன வென்பதையும் விளக்குவதால் அதற்கு 'வேதாந்த சாஸ்திரம்' எனப் பெயர் வாய்த்தது. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்குமுள்ள ஒற்றுமையை யறிவதே பலவகைப்பட்ட அறிவின் முடிவு. பல்லாயிர மைல்கள் ஓடிச்செல்லும் நதிகள் முடிவில் கடலிற்போய்ச் சேர்வதுபோலப் பிரபஞ்சத் தோற்றத்தில் பலவழியுஞ் சென்றலையும் அறிவாகிய நதிகள் முடிவில் கரையற்ற அகண்ட சச்சிதானந்தப் பிரேமைக்கடலிற்போய்ச் சேர்கின்றன.

ஃ

"துக்கமென்பது எது?" துக்கமெல்லாம் இல்லாமற்போவதால் உண்டாகக் கூடியது. எனக்கென்ன இல்லாமற்போனது? எனக்கு வேண்டியதெது? மனிதன் வேண்டுவதென்ன?—புவியின் புகழா? உலகத்தில் கீர்த்தியில்லாதவர்கள் யாருமில்லை. பெரிய திருடனுக்குங்கூடப் புத்தி சம்பந்தமான கீர்த்தியுண்டு. ஆனால், யாருடைய கீர்த்தியும் ஸம்பூர்ணமானதல்ல. ரூபமோ?—இது கொஞ்சம்போதும். ஜனங்கள் பார்த்தால் முகத்தின்மேல் துப்பாமலிருந்தாற்போதும். சுகமோ?—இருக்கும் சுகம் என்றைக்கும் வற்றுதிருந்தால் மகா பாக்கியமே. புத்தியோ?—இந்தப் பூவுலகில் யாரும் தங்களுக்குள் புத்தி குறைந்திருக்கிறதென்று நினைத்ததில்லை. நானும் நினைத்தவனில்லை. வித்தையோ?—இதன் குறைவை யொப்புக்கொள்கிறேன். ஆனால், வித்தையின் குறைவால் எவரும் அடியுடன் கெட்டுவிட்டதில்லை. இருக்கும் வித்தையைப் பெருக்கிக்கொள்ள வாழ்நாள் முழுதிலும் வேண்டிய நேரமிருக்கிறது. காதலோ?—சிநேகமோ—? இவை யிரண்டுக்கும் பிரீதியே காரணம். முடிவில் இந்தப் பிரீதியே துக்கத்திற்கும் இடமாகிறது. கடைசியில் எதிலுமே மனோசாந்தியில்லை. பொம்மைகளைக் கஷ்டப்பட்டுத் தூக்கிக்கொண்டு திரியும் குழந்தைகளைப் பார்த்துப் பெற்றோர்கள் சிரிப்பதுபோன்று, ஞானிகள் நாம் சுமந்து அலையும் உலக இச்சைகளை நோக்கிப் புன்னகை கொள்கின்றனர்.

ஃ

"நமது வாழ்வின் அலைகள்" நிமிஷமொருமுறை குணம் மாறிக் கொண்டே யிருக்கிறது. அநேக எண்ணங்களுதிப்பதும், அவைகளெல்லாம் உடனுக்குடன் அழிந்துபோவதும் அனுபவஸித்தம். அகாதமான ஸமுத்திரத்தில் அடிக்கடி அலைகள் ஓயாமல் அடிக்கின்றன. உடனே அவைகள் நாசமாகின்றன. அத்துடன் அலையடிப்பது நிற்கின்றதா?—இல்லை, என்ன ஆச்சரியம்!

---

*தன் கையில் அதிகாரம் இருந்தபோது துள்ளிக் கொக்கரித்தவன், அந்த அதிகாரம் தொலைந்ததும் பெட்டிப் பாம்புபோல் அடங்கிவிடுகிறான்.*

ஹோ என்ற ஆர்பாட்டத்துடன் அலையோடி வருகிறது. அதுவும் கரைக்கு வந்தவுடன் காணமற்போகின்றது. அதற்குப் பின்னால் கோசப்தத்துடன் மற்றொரு அலை யடித்துக்கொண்டே வருகிறது. கடைசியில் அதுவும் மறைகிறது. பிறகு சிறிய அலையொன்று கம்பீரமாய் வருகிறது. அதன் கதியும் முன்போலவே தானாகிறது. ஒரு அலைக்குப் பின்னால் மற்றொரு அலை வருவதைப் பார்த்திருந்தும் மரணத்திற்குப் பயப்படுவானேன்? மனம் ஸஞ்சலமடைவானேன்? நமக்குப் பின்னால் அநேகர் நம்முடைய ஸ்தானத்திற்கு வரக் காத்திருப்பதால் நமது ஜீவிதகாலத்திற்குள் மனதை சுத்தப்படுத்தி ஸத்கருமங்களைச் செய்ய வேண்டுமென்று ஏன் துரிதப்படவில்லை? நமது வாழ்வு அலையையொத்தேயிருக்கின்றது. இதற்குமுன் அனேகமாயிரம் ஜனங்கள் ஆவலோடும் ஆசையோடும் ஸஞ்சரித்துவிட்டு மறைந்துபோன உலகத்தில்தான் நாம் வசிக்கிறோம். முன் சொன்னவர்களில் யாராவதொருவர் இப்போதிருக்கின்றாரா? "பாட்டனார் பூட்டனார் எங்கே! போகமாட்டோமென்றாலும் மரணம் நம் பங்கே."

ஃ

"ஆசைக்கோர் அளவில்லை, அகிலமெலாங்கட்டி யாளினுங் கடல் மீதிலே." தரித்திரன் தனக்கொன்றுமில்லையென்று தெரிந்திருந்தும் அவனை விட்டு ஆசை யகலவில்லை. பணக்காரன் ஏதேஷ்டமான பொருளை வைத்துக்கொண்டும் ஏதோ ஆசையால் மனம் வருந்துகிறான். துஷ்டன் தான் செய்யும் துஷ்கிருத்தியங்கள் நாளுக்குநாள் அதிகரிப்பது தனக்கு ஒரு கீர்த்தியென்று நினைக்கிறான். யாருக்குத்தான் உலகத்தில் வசிக்கப் பிரியமில்லை? இன்றைக்கு மரணம் வந்தாலும் நன்றாயிருக்குமென்று கூறுகிறவர்களுக்கு அப்பொழுதே ஒரு வியாதி திடீரென்று வந்தால், உடனே தெய்வத்தை வணங்கிக் கப்பம் காணிக்கைகளை ஸமர்ப்பித்து, உண்டான ரோகத்தை நிவர்த்திக்க உபாயம் தேடுவார்கள். உலக ஆசை மேன்மேலும் வளர்வதன்றி ஒழிவதாயில்லை.

ஃ

"ஆசைப்பட்ட பண்டம் அழுகிப்போயிற்று" என்பது பழமொழி. பணத்தைக்கண்டு ஸந்தோஷப்படுகிறோம். அது செலவழியுந்தோறும் பெரிய ஏக்கம்; கள்வன் அபகரிப்பினே பெரிய துக்கம். குழந்தையின் விளையாட்டைக்கண்டு ஆநந்தம்; அதற்கு வியாதி வந்து மெலிந்தால் உடனே நம்மை வியஸனம் பீடிக்கிறது; ஸந்தோஷ சித்தம் மாறிப்போகிறது. முதலில் ஸந்தோஷம்; பிறகோ துக்கம். தன் மனமே தனக்கு சத்துரு. துன்பத்திற்குள்ளாக்குவதும், இன்பத்தை இச்சிக்கும்படி செய்வதும் மனத்தின் இயல்பன்றோ? உண்மையைப்பற்றிப் பரியாலோசனை செய்யாமல் மனதைக் கண்டபடி யலையவிட்டு, ஸுக துக்காதிகளைக் கற்பித்துக்கொண்டு வியஸனப்படுவது எத்தனை மதியீனம்?

ஃ

---

தனக்குப் பூரணமாகக் கெடுதி செய்த மனிதன் தன்னுடன் குலாவ வருவானாகில், அந்தக் காரணத்தின் உன் மர்மத்தைத் தெரிந்துகொள்வதற்குத் தீர்க்க திருஷ்டியும், நுண்ணிய ஆராய்ச்சியின் சக்தியும் வேண்டும்.

"மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்" வீட்டை சுத்தப் படுத்தி வாழ்தல் எப்படி அவசியமோ, அதுபோல் மனத்திலுள்ள அழுக்கை அதாவது துராலோசனைகளைக் கண்டிப்பு என்னும் துடைப்பத்தால் தூத்தி யடிக்கவேண்டும். கோபம், துக்கம், அகங்காரம், துவேஷம், பொருமை, வஞ்சனை, ஏமாற்றுதல், துரோகத்தன்மை—இவைகளை யெல்லாம் மனதில் குடிவைத்து, அவைகளிடம் வாடகை வசூல் செய்வதுபோல் அடிக்கடி நிஞ் சித்து அவைகளை அனுஷ்டித்துக்கொண்டு வந்து நாளடைவில் அவற்றின் கிளைகளை விர்த்தி செய்துகொள்வது மனிதனுடைய ஸ்வபாவம். ஒரு விதை விதைத்தால் பிரமாண்டமான விருக்ஷமாவதுபோல் ஒரு கோபமாகிய விதையை மனதாகிய பூமியில் விதைத்தால் அகோரமான பாப விருக்ஷமாகி றது. ஈசுவர சிருஷ்டியின் மகிமையையும், தெய்வ ஸங்கல்பத்தையும், பகவான் பின்னுக்கு சிக்ஷை விதிக்கத் தவருரென்பதையும் அறியாத மூடன் கண்ட வாறு திரிந்து பாப கிருத்தியங்களைச் செய்து கர்மத்தை அதிகப்படுத்திக் கொள்கிறுன். இவன் செய்வதொன்றும் வீண்போகாது. புண்யம், பாபம்—இவ்விரண்டில் எதைக் கைக்கொண்டு செய்தாலும் அதனதன்பலன் அவனுக் கென்றே காத்துக்கொண்டிருக்கும். பாக்கியோதயத்தால் கிடைத்த உத்தம மான மனித ஜன்மத்தை வியர்த்தமாக்காமல் பகவானுடைய பாதகமலங்களை ஸதா மனதில் தியானித்து நற்பதம் சேர்வது நன்று.

ஃ

"பகவத் பிரார்த்தனை" ஓ! சிருஷ்டிதிதி ஸம்ஹாரகா! ஸர்வபூத மனோ ரஞ்சகா! ஸர்வலோக தயாபரா! கொடும்பாவிக ளுள்ளத்தில் யாதொன்றை நினைக்குமுன் எள்ளளவும் பேதமின்றி யறியும் வல்லவன் நீயன்றோ? எமக்கு வேண்டியவற்றை ஏற்கெனவே நீ யளித்துவரினும், எங்கள் பேதமையினுல் உனது தயாளகுணத்தை முன்னிட்டுக் கெஞ்சி மன்ருடுகின்றோம். அடியோம் ஜனனமாதி காலமெல்லாம் நின் கற்பனைக்கு விரோதமான நினைவுகளினுலும், வார்த்தைகளினுலும் பாவத்தைச் சுமத்திக்கொண்டு உனது பாதாரவிந்தத் திற்கு அபாத்திரர்களானோம். ஓ! தீனதயாளனே! உனது நியாயப் பிரமாணத் தின்படி யொழுகாது யாம் விளைத்த பேதகச் செயல்களைப் பொறுத்து, இனி கனவிலும் அப்படிக்கொத்த செயல்களைப் புரியாதிருக்கத்தக்க புத்தி யுதவி அருள்புரிந்திடுக. நீ இரங்காவிடில் வேறு கதியுண்டோ? ஓ! ஈசனே! நாயகனே! நேயனே! மாயவனே! தேவனே! உனது தயாளகுணத்தை முன் னிட்டு அடியார்கள் இருகரங்களுங் குவித்து அடைக்கலம் புகுந்தோம். இதுவே சமயம்; எங்களை இரக்ஷிப்பாய் ஸ்வாமி. ஓம் தத்ஸத்.

---

அன்பானவர்கள் எவருமில்லையென்று ஒருவர் கூற, அதற்கு மற்றவர் நீங்கள் ஒவ்வொருவரிடமும் குற்றமே காண்கிறீர்கள், அதனுல் எவரும் உங்களிடம் சேருவதில்லை யென்ருர். எவ்வளவோ குற்றங்களை மறந்து அன்பு காட்டியும் விரோத உணர்ச்சியும் பிரிவினையுமே கொண்டவர்களை நீர் கண்டி ருந்தால்—அத்தகையோரை உமது குடும்பத்தில் நெடுங்காலம் வைத்து அன் னவஸ்திரமளித்து ஆதரித்து அதில் நீர் பட்டிருந்தால் இப்படிப் பேசியிருக்க மாட்டீர்கள் என்ருர் முதலிற் கூறியவர். ஒன்றில் அனுபவப்படாதவர்களுக் குப் பிறாது அனுபவத்தின் பாடும், துயரமும் புலனுவதில்லை.




# துவேஷப் பெருக்கின் விபரீதம்.



த்திரத்தில் செய்யும் காரியம் அவலமாம்; அது பின் நேர்வதை எண்ணாத துடுக்கில் செல்வதாம்; அங்கு புத்தியும் யோசனையும் தக்கவாறு இராதென்பர். செய்து விட்டுப்பின்னர் ஏன் செய்தோம் என்றுஎண்ணி நோகவைக்கும். ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு என்பதும் ஓர் பழமொழி. ஆத்திரத்தினோடு அடுத்துத் தொடரும் குணங்களில் துவேஷமும் ஒன்றும். துவேஷம் பாராட்டுவோரின் பாவ ஹிருதயம் இருளடர்ந்துபோகும்; அன்பு மாறிப் பகையாகும்; இரக்கம், தயை நீங்கிக் கொடுமையிற் சிந்தனை புகும்; நியாயம், தர்ம புத்தி அங்கு குடிகொள்ளாது; வஞ்சனை, மோசம், ஏமாற்றுதல்கள் பெருகிடும்; நன்றி, விசுவாசம் கடுகளவும் தோற்றாது. தனக்குப் பிறர் எவ்வளவு உழைத்திருப்பினும் அதை எண்ணிப் பாராது; பிடிவாத புத்தியே மிகுந்து, கடவுள் ஒருவர் உண்டு என்று அஞ்சுவதையும் தொலைத்துத் திடுதிடுத்த மடமையில் மீறித் தள்ளும். துவேஷம் சாதித்தோர் வாரிக்கொண்ட தொன்றுமில்லை; ஒரு பெருந் தீங்கினைப் பிறர்க்கு இழைத்து அதில் திருப்திகொண்டு பூரிக்கும் விஷத்தன்மை யன்றி வேறுநலம் யாதும் அங்கு இல்லை. இராமரிடத்துத் துவேஷம் காட்டிய கைகேசி எந்த லாபத்தினையும் காணலை; துவேஷம் முற்றிய துரியோதனன் தன் வம்ஸ நாசமே பார்த்தனன்; அனைவரையும் இழந்து, ஒருவனாய் நின்று, அழுது சோர்ந்து, தனியே மடிந்து முடிந்தனன். துவேஷம் ஒரு விஷநாகம் போன்றது. அதனை வளர்ப்போர் அதைக்கொண்டு பிறரைத் தீண்டிக்கெடுப்பதொரு புறமிருக்க, தாமே அதனாற் கடியுண்டு மாள்வதே அநந்தம் கோடி. ஃ

பரஸ்பரம் ஒருவருக்கொருவர் பிரீதி பாராட்டுவது எங்கும் இயற்கை. பெற்றோர்கள் தம் மக்களிடமும், கணவன் தன் மனைவி

---

புது மாப்பிள்ளைகளிற் சிலர் ஆரம்பத்தில் யோக்கியர்கள்போலிருந்தாலும், வெகு சீக்கிரத்தில் தங்களின் துவேஷ குணத்தைக் காட்டிவிடுகிறார்கள்.

யிடமும், ஸகோதரர்கள் ஸகோதரிகளிடமும் விசேஷித்த அன்பு கொள்வது ஸர்வ சாதாரணம். இந்த அன்பு என்றும் பெருகி ஓங்குதலும், கடவுளின் ஆசி அங்கு கலப்பதும் சகஜம். ஆனல், ஒருவர்மீது துவேஷம் கொண்டுவிட்டு, அந்தத் துவேஷக் காரணமாக மற்றவர்மீது அன்புகொள்வதாகில், எவர்கள்மீது அன்பு வைக்கப்பட்டதோ அவர்களுக்கு அழிவும், கெடுதியும், கடைசியாக அகால மரணமுங்கூட நேர்ந்துவிடுகின்றது. ஒருவர்மீது முன்பு மிகு அன்பாக இருந்து, பிறகு அது வற்றிப்போய் மற்ருெருவர்மீது அந்த அன்பு தாவுவதும் உண்டு. ஆனல், அவ்விதம் தாவுவதானது —முதலில் அன்பு வைத்தோரிடத்துத் துவேஷம் கொண்டு செய்வதாய் இருக்கக்கூடாது. அவ்விதம் துவேஷ புத்தியுடன் செய்யும் காரியத்தைக் கடவுள் ஒப்பாது போகிருர்; அந்தக் காரியமும் பூர்த்தியாய் நிறைவேறுவதில்லை. முன் அன்பு வைத்தோரிடமும், இப்போது அன்பு வைப்பவர்களிடமும் ஒரேவித அன்பைக் கோள்வதாகில், அந்த அன்பு துவேஷவிஷமற்றதாதலின் அங்கு தீது எதும் நேர்வதில்லை. அது கிரமத்திற்கும் பொருந்தியதாகி அன்பைப் பெற்றவருக்கும், அன்பு காட்டியவர்கட்கும் நலமே விளைகின்றது. இவ்விதமின்றித் தர்ம நியாயந் தவறிக் கெட்டு, எவரிடம் அன்பைச் செலுத்துவது தக்கதோ அங்கு பூரண துவேஷம் சாதித்து, அந்தத் துவேஷக் காரணமாக மற்ருேரிடத்தில் அன்பு பெருகுவதாயின், துவேஷத்தினின்றும் உற்பவித்த அவ்வித அன்புக்குப் பாத்திரர்களானேர் க்ஷேமப்படாமல் நசித்தே போகின்றனர். அவர்களது விருத்தியின்பொருட்டு எவ்வளவோ செலவிட்டு முயன்றிடினும் அது பலன் தருவதில்லை. தான் அன்பு பாராட்டியவர்கள் விருத்திகுன்றி மாள, தான் துவேஷித்தோர் க்ஷேமயாய் வாழ்வதைக் கண்டு வயிறு கொதித்து வாடவும் வருகின்றது. துரியோதனன் பஞ்சபாண்டவர்களிடத்துப் பரிசுத்தமான அன்புகொண்டு, அவர்களின் மூத்தோனுகிய கர்ணனிடத்தும் அதே பரிசுத்த அன்புடன் இருந்திருப்பின் கர்ணனும் க்ஷேமமாக இருந்திருக்கலாம்; பாரத யுத்தமும் நிகழ்ந்திராது. அவ்விதமின்றி, பாண்டவர்களிடத்துத் துவேஷம் மிகுந்து, அந்தத் துவேஷத்தோடும் கலந்த அன்பைக் கர்ணனிடத்துக் கொண்டதால், கர்ணன் சுகப்படுவதற்கின்றித் தவித்துப் போர்முனையில் இறக்கின்ருன். துவேஷ அன்பைப் பெற்ற கர்ணனின் கதி மிகு பரிதாபமாய் முடிகின்றது. கர்ணனிடத்துத் துவேஷஅன்புகொண்ட துரியோதனனும் இறுதியில் பெற்ற பயன் எதுமில்லை. தான் அன்புவைத்த கர்ணன் சாக,

---

எவன் எளியவனே, எவன் திக்கற்றவனே அவனைப்பற்றிக் குறிப்பாக மனதில் வைத்து, அவனை விசேஷமாகக் கௌரவித்துத் தம்மால் இயன்ற உதவிகள் யாவும் செய்பவர்களைப்பற்றிக் கடவுள் பெருமகிழ்ச்சியுடனும் கவனிப்பார். பாத்திரமறிந்து செய்யும் உபகாரம் வீண்போகாது.

தான் துவேஷித்த பாண்டவர்களோ வெற்றி வாழ்வு காண்கின்றனர். இது துவேஷ அன்பு செய்யும் கெடுதி.



இவ்விதமே, ஒருவன் உத்தமியும் பதிவிரதாங்கனையுமான தன் மனைவியிடத்துத் துவேஷம் மிகுந்து, வேறொரு நங்கையை மணந்து அவளுடன் சுகிக்கின்றான். இப்புதிய நங்கையின்பால் செலுத்திய அன்பு—மூத்த மனைவியைப் பகைத்த துவேஷ விஷத்துடன் கூடிய அன்பாக உள்ளது. இத்தகைய விஷமமான துவேஷ அன்பு பெரும்பாலும் நன்மை செய்வதில்லை; விருத்தி கொள்வதுமில்லை; அதற்கு எதிரிடையாகச் சோதனைக்குழியிலேயே விழுகின்றது; அழுகியும் போகின்றது. தான் அன்புகொண்ட இரண்டாவது மனையாள் ஒரு குழந்தையைப் பெற்று மரணபுரம் சேர்கின்றாள்; பிறந்த குழந்தையும் தாயுடன் கடவுளிடம் போய்விடுகின்றது. தான் அன்புவைத்த இடம் இங்ஙனம் ஸர்வநாசமாகி முடிய, தான் துவேஷித்த முதன் மனைவியோ எவ்வித சோதனைகட்கும் ஆளாகாமல் சுகமாகவே யிருப்பதை நோக்கி வியப்புற நேர்கின்றது. எனவே, களங்கமற்ற அன்பு நலம்செய்வதுபோல, இந்தத் துவேஷ விஷ அன்பு நன்மை பயப்பதில்லை. இத்துவேஷ அன்பை மற்றவரிடத்து வைக்காதிருப்பின் அன்னோர் க்ஷேமமாய் வாழ்ந்திருக்கலாமென்றுங் கூட நினைக்கும்படியாகிறது. புத்திரப்பேறு இல்லையென்று தன் மனைவியின் சம்மதம் பெற்று மற்றொருத்தியை மணந்து, இருவரிடத்திலும் ஒரேவித அன்பைக்கொண்டிருப்பின், புதிதாக வந்த நங்கையும் நீடிய ஆயுளுடன் வாழ்ந்திருக்கலாம்போலுங் காண்கிறது. அதாவது, துவேஷ அன்பை அப்புதிய நங்கையிடத்துக் கொள்ளாதிருப்பின் அப்புதிய பெண்மணியும் க்ஷேமமாக இருந்திருக்கலாமென்று தோன்றுகிறது. ஆகவே, துவேஷவிஷமில்லாத களங்கமற்ற அன்பு நன்மையைச் செய்கிறதென்றும், துவேஷ விஷத்துடன் கூடிய அன்பு தீமைக்கே ஏதுவாகிறதென்றும் தீர்மானிக்கலாம்.



எந்தக் காலத்திலும் துவேஷம்கொண்டு தீங்கு விளைத்தோர் சுகப்பட்டதில்லை. தானும் தன் மனைவி மக்களுமான தன் பெரிய குடும்ப பாரத்தைப் பல வருடகாலம் தாங்கிச் சுமந்தவனுக்கே துவேஷ சிந்தையுடன் கேடுசூழக் கருதுவோன் தானே அக்கேட்டிற்கு ஆளாகி, தான் எவர்கள் வாழவேண்டுமென்று நினைத்தனனோ அன்னோர் தன் கண்முன்பே வாழ்வு தடுமாறிட, இவனும் அழிந்து

---

செய்ததைச் செய்துவிட்டு—"தயவுசெய்து மன்னிக்கக் கோருகிறேன்" —என்று கடைசியாக ஒப்பாரி வைக்கும் நவீன நாகரீக காலம் இது.

படுகின்றான். மூத்தாளின் மக்களிடத்துத் துவேஷம் கொள்ளும் மாற்றாந்தாய்மார் அந்த நிமிஷத்திற்கோ, சில காலத்திற்கோ செழித்து வாழ்வதுபோல் தோற்றினும், பிந்திய நாட்களில் அவர்கள் நல்ல வாழ்வு காண்கின்றார்களில்லை. விதவையாகிவிட்ட தனக்கே ஸர்வசொத்துக்களும் சேரும்படிப் பாடுபட்ட தமய னிடத்துத் துவேஷங்கொண்ட தங்கை எதிர்ப்பக்கத்தில் கூடிக் கொண்டு மேல்மனை மெத்தை உப்பரிக்கையில் வாழினும், பிறகு சீக்கிரமே மற்றவர்களால் வஞ்சிக்கப்பட்டுச் சொத்துகள் யாவும் அழிந்து தரித்திர ஸ்திதிக்கு வந்துவிடுகிறாள். தமயனின் மனைவி யிடத்து துவேஷமாகி அவளது சொத்துக்களை அபகரிக்க நினைத்த தம்பியும் க்ஷேமப்பட்டானென்பதில்லை. தம் நலத்தையே நாடுங் கணவனைத் துவேஷித்து வீட்டை நரகக்குழியாக்கிய பெண்டீரும் தம் பர்த்தாவின் காலத்திற்குப் பிறகு சுகப்பட்டதில்லை. தான் உத்தமனாயும், உண்மையன்புள்ளவனாயும், உட்பட்டு நடப்பவனாயு மிருக்கத் தன்மீது அநியாயமாகத் துவேஷம் சாதிப்பது நோக்கி வயிறெரிந்து புண்ணாகும்பொழுது, அந்த வயிற்று எரிச்சலான அக் கினி துவேஷித்தோரைப் பற்றிக்கொண்டு வாட்டத்தொடங்கி விடுகிற தென்பது பல இடத்துங் கண்ட உண்மை. ஐயோ! நிரபராதியாகிய என்னை அநியாயமாய் இப்படித் துவேஷித்து வஞ்சித்தார்களே என்று சத்தியவந்தனொருவன் அலறும்பொழுது, அவ்விதம் கதற வைத்தாரின் வாழ்வுக்கு அந்த நிமிஷ முதற்கொண்டே அனர்த்த காலம் ஆரம்பமாய் விடுகின்றது. அந்தத் தீமை அப்பொழுது தெளிவாய்த் தெரிவதில்லை; பின்னுக்கே புலப்படுகின்றது.

ஃ

இவ்வாறு துவேஷம் முற்றினோர் தாம் கெடுவதன்றித் தம் மிடம் உள்ளவற்றை யெல்லாம் பிறருக்கு வாரிக்கொடுத்து அவ் வகையில் மற்றவரைக் கொழுக்கவைத்து, அதில் ஒரு மௌடீகத் திருப்திபடுவதும் வெகு விநோதம். "கொடுத்தாலும் அன்னியர்க ளுக்குக் கொடுப்பேனே தவிர, அந்தப் பயலுக்காவது நான் தரவா வது; அது ஒருபோதும் கிடையாது; ஒரு சொம்பு கிண்ணிகூடக் கொடேன்" என்பர். "ஆமாம்! நீங்கள் சொல்வது வெகு சரி; அவனுக்கு ஏன் தர? எங்களைப்போலொத்தவர்கட்குத் தந்தாலா வது நாங்கள் அதை என்றைக்கும் விஸ்வாச மனத்தோடும் நினைப் போம்" என்று மற்றவர் இன்னோரைச் சிலாகித்துப் பேசித் தமக்கு வேண்டியவற்றை யெல்லாம் அப்போதைக்கப்போது சிறுகச்சிறுகப் பறித்து லாபம் காண்பர். இங்ஙனம் வஞ்சகமாகப்

---

*இன்னார் இயற்றிய நூல் என்று வெகு பிரபலமாக விளம்பரம் செய்தது —அதை இயற்றினோரைத் துதித்துக் கொண்டாடுவதற்கல்ல; அந்த நூல்கள் விலையாகித் தாங்கள் கனத்த லாபம் சம்பாதிப்பதற்காகவே தான்.*

புகழ்வோரையே தமக்கு மிகவும் வேண்டியவர்கள்போன்றும் இத் துவேஷம் முற்றினோர் பாவித்துப் பூரிப்பர். இரு அரசர்களும் ஒருவர்மீதொருவர் துவேஷம் கொண்டுவிடுகின்றனராக, மூன்றாவதான ஒருவன் இவ்விருவரில் ஒருவர் பக்கத்துத் துணையாகச் சேர்ந்து மற்றொருபக்கத்துள்ளவனை யழித்துத் தான் செய்த உதவிகட்கு சன்மானமாகப் பல கிராமங்களையும் பூமிகளையும் அடைகிறான்.

ஃ

தன் குமாரனை வெறுக்கும் ஐசுவரிய ஸம்பன்னரான தந்தையின் பக்கம் மற்றவர் கூடிக்கொண்டு அந்தத் துவேஷத்தைப் பெருகச்செய்து, அவரிடமுள்ளவற்றைத் தாங்கள் சிறுகச் சிறுகப் பறித்துக்கொண்டு போய்விடுகிறார்கள். தன் மனுஷ்யர்களிடத்துத் துவேஷம் மிகுந்தவனைச் சூழ்ந்துகொண்டு, "அந்தத் துரோகிகளுக்கு ஏன் கொடுக்கிறாய்; நிலம், வீடு, சொத்துக்களை என் பேருக்கு எழுதிவைத்துவிடு" என்று தூண்டிக்கொடுத்து அபகரித்துக்கொண்டவர்களு மிருக்கிறார்கள். தன் எஜமானனின்மீது துவேஷம் முற்றியவனை அடுத்த கடைக்காரன் தன்னிடம் வேலைக்கு வைத்துக்கொண்டு அவன் மூலமாக எல்லா வியாபாரகசியங்களையும் அறிந்து லாபமடைகிறதுமுண்டு. எவர் மீது ஒருவனுக்குத் துவேஷமோ அவனைக்கொண்டு தங்கள் காரியத்தை நிறைவேற்றிக் கொள்வோர் பலராவர். துவேஷத்தை வளரச்செய்து கோர்ட்டு கச்சேரிகட்குப் போகும் வரையில் கொண்டுவிட்டு, நடுவே தாம் வேண்டியது பறித்துக் கொள்வோரும் அநேகர். ஒரு நானூறு ரூபாய்களைத்தான் ஒருவருக்குக் கொடுக்கையில் அதற்கு ஒரு அணா ஸ்டாம்பு ஒட்டிய ரசீது பெற்றுக்கொள்வதே போதுமானதாயிருக்க, இன்னொருவன் இடையே வந்து நுழைந்து அவ்விதம் ரசீது பெறுவது சரியல்லவென்றும், ரூபாய்களைக் கொடுத்ததற்குப் பத்திரம் மூலமாக எழுதி ஆதாரவு பெறுவதே தக்கதென்றும் கூறி, பணம் வாங்கிக்கொள்ளவிருப்பவர்மீது நம்பிக்கையின்மையும் துவேஷமும் உண்டாகுமாறு செய்கிறான். இவ்விதம் துவேஷம் முற்றினால் அவன் பத்திரம் எழுதுவானென்றும், அந்தப் பத்திரத்தைத் தான் எழுதிக்கொடுத்து அதற்குக்கூலியாக ஓரிரண்டு ரூபாய்களைப் பெறலாமென்றும் இவன் எண்ணம். இவ்வாறாகவே, தம் காரிய லாபத்திற்காக ஒருவரது துவேஷத்தை இன்னும் பெருகும்படி செய்விப்பதுமுண்டு.

ஃ

மருகியிடத்துத் துவேஷம் மிகுந்த மாமியின் பக்கமிருந்து தமக்கு வேண்டியதை யெல்லாம் அந்த மாமியின் மூலம் பெற்று

---

மனைவிக்குத் தெரியாமல் கணவன் எவ்வளவோ செய்கிறான். கணவனுக்குத் தெரியாமலும் மனைவி செய்கிறான். அதது அவரவர் நெஞ்சிலே.

றுக்கொள்வதையும் காண்கிறோம். இருவருக்கும் ஏற்படுகிற துவே ஷத்தில் வக்கீல் லாபமடைகிறார். தன் தமயனின்மீது துவேஷம் முற்றியவனைக்கொண்டு தம்பி தனக்கு வேண்டிய காரியங்களை நடத் திக் கொள்கிறான். துவேஷம் கொண்டவனோ மூத்தவன் பார்த்து வயிறு எரியட்டுமென்று இளையவனாகிய தம்பிக்கு எல்லா உதவி களையும் செய்கிறான். இவ்விதம் துவேஷப்பட்டவர்களின் மூலம் தங்களின் காரியத்தைச் சாதித்துக்கொள்வது சாமர்த்தியமான தந் திரம். இந்தத் துவேஷத்தால் பிறர் நலம் அடைய நேர்கிறதேயன்றி, தமக்குண்டான நன்மையோ, மனோ சமாதானமோ எதுமில்லை. என்ன பேதமை இது! யாவும் அறிவு குன்றி மூடத்தனமாய் மூட்டுப் புத்தியுடனே செய்யும் அலங்கோலங்கள் தான்.

ஃ

துவேஷம் மிகுந்தோர் தங்களுக்குப் பிறர் எவ்வளவு உதவி கள் செய்திருப்பினும், பல வருடகாலம் ஆதரித்திருப்பினும், "அவர்கள் என்ன செய்து விட்டார்கள், அவர்கள் என்ன வாரிக் கொடுத்து விட்டது?" என்று தூற்றத்தொடங்குவதன்றி, செய் நன்றியினைப்பதில்லை. "அவர்கள் வீட்டில் நாய்போல் உழைத்ததற்கு இவ்வளவு சோறு போட்டதைத் தவிர்த்து நல்ல துணிமணி யுண்டா, ஒரு பட்டுச்சேலை கட்டி யறிவேனா?" என்றும் பழிக்கத் தொடங்குவார்கள். துவேஷமானது பிறர் புரிந்த உபகாரங்களை யும், ஆதரிப்புகளையும் அடியோடு மறக்கச்செய்து விடுகின்றது.

ஃ

திடீரென்று கணவன் இறந்து எவ்விதத் திக்குமின்றித் தவித்த நங்கைக்கு ஒருவர் பிரதி மாதமும் பணம் அனுப்பி ஏழெட்டு வரு ஷங்கள் வரை உதவுகின்றனராக; இவ்வாறு அவரது ஸம்ரக்ஷணைக் குட்பட்ட நங்கையோ பிறகொருகாலம் அவர்மீது துவேஷம் பூண்டு "அவர் என்ன அப்படிக்கொடுத்து விட்டது; அவர் தந்ததெல்லாம் ஒரு வருஷத்திற்குத்தான்; அதற்குப்பிறகு நாலைந்து மாதங்கட்கு ஒரு முறை கொடுத்து அதையும் பிறகு நிறுத்திவிட்டார்" என்று தூற்றத் தொடங்குவதாகிறாள். இதனைச் செவியுற்ற அவர், தாம் தந்து வந்த உண்மையைத் தெய்வம் அறியும் என்று கூறி மனவே தனையுடன் மௌனமாகிறார். இவ்விதமே, பல நன்றிகளையும் பெற் றுக்கொண்டு "அவர்கள் எனக்கு எதும் செய்யவில்லை" யென்று எல்லோரிடமும் எப்பொழுதும் சொல்லித் திரிவது சிலரது ஜென்ம

---

பிரசுரகர்த்தர்களிற் சிலர் தாங்கள் வெளியிடும் புஸ்தகங்களில் அவற்றை இயற்றினோரின் பெயர்களைப் போடாமல் நீக்கிவிடுகிறார்கள். இது ஒரு அநியாயச் செயலாகும்.

ஸ்வபாவம். அதையே பிறரும் நம்பிக்கொள்ளும்படி நேரிடுகிறது. ஒருவன் உத்தமனுயும் யோக்கியனுயு மிருக்கையில் அவனைக் கபடனென்றும், துரோகியென்றும், மோசம் செய்தவனென்றும், நன்றியற்றவனென்றும், பெற்றேரைக் காப்பாற்ருதவனென்றும் பலர் அறியத் தூற்றி அதையே எவரும் உண்மையென்று மபங்கும்படி செய்யும் துவேஷிகளும் அநேகருண்டு. உண்மையாக உழைத்த ஊழியனையும், பந்துவையும் மிகப் பொல்லாதவனென்றும் பலரிடத் தங்கூறி அதையே பிறரும் நம்பும்படி செய்வர். பொய்யை நிஜமாக வழங்கும்படி செய்து விடும் சமர்த்தான தந்திரம் உலகம் தோன்றிய காலமுதல் இருந்து வருகிறது. பொய்யைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தால் நிஜம் தலைக்கிளம்பாமற் போய்விடும். அந்த தந்திரத்தைக் கையாளுவதற்கு வாய்க்கும் சந்தர்ப்பத்தைத் துவேஷ உள்ளத்தினர் எப்பொழுதும் நழுவ விடுவதில்லை. எவ்வளவு நன்மைகள் செய்திருந்தாலும், இல்லை யென்றே இந்தத் துவேஷிகள் கூறித்திரிந்து அதையே பிறரும் நம்பவைத்து விடுகிருர்கள். இதனுல் எவ்வளவோ செய்தும் நற்பேர் இல்லாமற் போய்விடுகின்றது. ஹா! துவேஷமிக்கோர் பிறரைப் பெரிதுங் கொடுமைப்படுத்திவிடுகிருர்கள். இங்ஙனம் கொடுமைப்படுத்தி இவர்கள் கண்ட பலனென்னவோ?

ஃ

துவேஷக் காரணமாக நன்றி மறந்து, அன்புகெட்டு, மனுேசாந்தம் குலைந்து, ஆத்திரம் மிஞ்சி, துரோக நினைவுகள் மேலிட்டு, விருத்தி குன்றி ஸர்வநாசமாவதல்லால் வேறில்லை யென்பதை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்த்துத் துவேஷத்தை யொழிக்க முயல்வாராயின் நலமாகும். இத்துவேஷிகளால் கொடுமைகட்கு ஆளானுேரின் மனமும் புண்பட்டுப் பதிலுக்குப் பதில் துவேஷம் கொண்டதாகிறது. அதை மறந்துவிட எவ்வவோ முயன்ருலும் முடிகிறதில்லை. ஒரு சமயம் மறந்துவிடத் துணியும்போது மீண்டும் அந்தத் துவேஷிகள் கொடுமை புரிந்தும் வைதும் பழய துவேஷத்தை முன்னிலும் அதிகமாகப் பெருகச்செய்து விடுகிருர்கள். ஒருவர் துவேஷ விதை விதைக்க, அதனின்றும் மற்றெரு துவேஷ விருக்ஷம் உற்பத்தி பெற்று ஓங்குகின்றது. இவ்வாருகத் துவேஷம் நெடுகப்படர்ந்து சென்று வளர்ந்து கொண்டிருப்பின்—அது சமரஸப்பட்டுச் சமாதானங் காண்பதுதான் என்றேயோ? ஒருகால், அவரவர்களின் துவேஷமும் குன்ருது பெருகிச் சென்று அவரவர்களது மரணத்துடன்—சவக்குழியில்—மசானத்தில்தான் புதைக்கபட்டு—முடிவு பெறுமோ?—யாதோ!!



---

சிலர் அனுவசியமாய் நம்மை அடிக்கடி வந்து பார்த்துவிட்டுச் செல்லுகிறவர்களா யிருக்கிருர்களே தவிர, அவர்களால் நமக்கு ஒரு நன்மையும் இல்லை.

# ஜன்மோற்சவ ஸ்தோத்திரம்.



ஒரு குழந்தையின் ஜனனமானது அழிவற்ற ஆத்மாவின் வருகையாகவும், அஞ்ஞானத்தால் அவதிப்படும் அண்டத்தாருக்கு மெய்ஞானத்தை யூட்டி ஆதரிக்க வந்த நூதன வீரர் சேர்க்கையாகவும், பரமேசுவாருடைய திவ்ய தொழிலைச் செய்யும் தாசனாகவும் இருப்பதால், பெற்றோருக்கு தாம் பெற்ற பிள்ளையானது பிரகாசமுள்ள ஓர் ஜோதியாகத் தோன்றி அவர்களது ஹிருதயத்தை ஸந்தோஷிப்பிக்கச் செய்கின்றது. இல்லறத்தாருக்கு ஜனிக்கும் குழந்தையானது பரமேசுவாரால் அருளப்பட்ட பாக்கியமுள்ள ஒரு வெகுமானமாகவும், பரமேசுவாருடைய பூரண பிரேமையைக் காட்ட வந்ததாகவும் இருக்கிறது. நூதனமாக ஜனித்த குழந்தையின் பரிசுத்தமான முகத்தில் பரமேசுவாருடைய பூரணப் பிரகாசமும், சாயையும் குடி கொண்டிருப்பதால், அந்தச் சிசுவானது குற்றமற்ற தேவ்தூதனைப் போலிருக்கின்றது.

ஃ

ஜன்மோற்சவ நாளில்:—அக்குழந்தையைப் பெற்ற தாயானவள் முகமலர்ச்சியோடு அதைப் பார்த்துப் பூரண பிரேமையோடு முத்தமிட்டு, கர்ப்பகாலத்திலேயே தான் மனப்பாடம் செய்து வைத்திருக்கிற பின்கண்ட பிரார்த்தனையைச் சொல்ல வேண்டும்.

“ஓ! பரமேசுவரா! அடியாள் மீது அன்புவைத்து அருளிய கருணையால் நூதனமாக ஜனித்த இந்தக் குழந்தையின் முகத்தைப் பார்க்க பாக்கியம் பெற்றேன். இந்த நூதன வரப் பிரஸாதத்திற்காக உம்மை வணங்கி ஸ்துதி செய்கின்றேன். ஓ! அருள் நிறைந்த அப்பனே! இந்தக் குழந்தையை ஆசீர்வதித்து உன் கிருபா நோக்கம் என்றும் இருக்குமாறு காத்து ஆதரிப்பீராக.”

என்று பிரார்த்திக்கவேண்டும். பிறகு பிதாவானவர் பின் வருகிறபடி பிரார்த்திக்கவேண்டும். தனக்கு அருத்தமே விளங்காத சுலோகங்களை,—அதைக்குருட்டுப் பாடம் செய்து பல பிழைகளுடன் ஊராருக்கு ஒப்புவித்து ஜீவிக்கும் புரோகிதனின் சுலோகங்களை,—தான் சொல்லி உளறுவதைவிட, பின்கண்ட விவரமான தனக்கும் தெளிவாயுள்ள பிரார்த்தனையைக் கூறுவது உத்தமமானது.

“மகிமையுள்ள ஓ! மங்கள நிகேதனனே! இந்தக் குழந்தையானது தனது தாயின் வயிற்றில் அனாதவாக விருந்து, அநேக அபாயங்களுக்கும் வியாதிகளுக்கும் தப்பி சுகமாக இருக்கும்படி போஷித்துப் பாதுகாத்ததற்கு எனது கருத்துங் கரமும் கூப்பித் துதி செய்கின்றனன். ஓ அப்பனே! அந்தகாரமும் தனிமையுமான தாயின் வயிற்றில், இந்தக் குழந்தைக்கு கை, கால், கண், மூக்கு, செவி, வாய் முதலான கருவிகளை

---

ஒரு நிலைமை முற்றிவிடும்போதுதான் அது சீக்கிரத்தில் ஒருவிதமாய்ச் சமனமடையுமென்பதற்கு ஒரு சுப சூசகமாகலாம். கலகம் ஒரு முடிவு தரும்.

அற்புதமான சிற்பியைப் போலிருந்து அமைத்தும், பக்குவமான பருவம் வந்தபோது பிரபஞ்சத்தில் வந்து நினது பரிசுத்தமான ஊழியம் செய்து உனது மக்களுக்கு உதவி செய்யும்படி ஜனிப்பித்ததற்கு, உள்ளம் அறியத் துதிக்கின்றனன். இந்த நூதனப் பிள்ளைப்பேறுனது அடியேனிடத்தில் உமக்கு இருக்கும் பூரண அன்பைப் பிரத்தியக்ஷப்படுத்துகின்றபடியால் இந்தப் பெரும் பாக்கியத்தைப் பிரஸாதித்தருளிய உமது குறைவற்ற கருணையைத் துதித்துக் கொண்டாடுகின்றனன்.

ஃ

ஓ! அகில விநோதா! அடியேனுக்குப் பூரண பிரியத்தோடு பிரஸாதித்தருளிய இந்தப் புத்திர பாக்கியத்தைப் பக்குவமறிந்து போஷித்துப் பாதுகாக்கவேண்டிய கடமையைச் சரியாகச் செய்ய வரம் ஈவாய். அடியேன் கேவலம் அசக்தனும் அபூர்ணனுமென்று அறிந்திருப்பதால் இந்தக் குழந்தையைப் பக்குவம் அறிந்து போஷித்துப் பாதுகாத்து உமது உண்மையான ஊழியனாகச் செய்வீராக. உத்கிருஷ்டமான பெற்றோர் கடமையையும் உத்திரவாதத்தையும் உமது கடாக்ஷமின்றி என்னமாக நிறைவேற்றுவேன்?

ஃ

உமது உதவியின்றி இந்தப் பொறுப்பான பெருங்காரியத்தை நிறைவேற்றுதல் அசாத்தியமன்றோ? ஆகவே, இந்தப் பெருமையுள்ள பெற்றோர் கடமைக்கு இன்றியமையாத உண்மையும், உறுதியும், ஊக்கமும், விஸ்வாசமும், வல்லமையும், புத்திரவாத்ஸல்யமும் பெற்றிருக்க, நீயே எனது போதனாக இருந்து அறிவிப்பாய். ஓ! ஈசனே! இந்தக் குழந்தையை ஆசீர்வதித்து இதற்கு நீரே நிரந்தரமான பரம தந்தையாகவும், தாயாகவும், நண்பனாகவும் இருந்து துன்பங்கள் அணுகாமல் நினது மஹிமை பொருந்திய மடியில் வைத்துத் தாலாட்டி ஆதரிப்பாய். இல்லறத்தாரோடு இன்பமாகவாழும் எனது வீட்டுக்குல தெய்வமே! இந்தக் குழந்தையின் உன்னத ஜனனத்தால் அதைப் பெற்றோருக்கும் மற்ற குடும்பத்தாருக்கும் சந்தோஷத்தையும்சாஸ்வதமான சுக வாழ்வையும் உண்டாக்கி ஆசீர்வதிப்பாய். ஓ! தயாநிதியே! இவையாவும் உமது மஹிமா பிரதாபத்தைப் பிரகாசிக்கச் செய்வதாக! ஓம் தத் ஸத்.”

ஃ

இந்தப் பிரார்த்தனையைச் செய்ததற்குப்பின் குழந்தைக்கு நாமகரணம் செய்யும் பொழுது பின்கண்ட பிரார்த்தனையைச் சொல்வது உத்தமம். பொருள் தெரியாது உளறும் சுலோகங்களைவிட இது மேல்.

குழந்தையைப் பெற்ற பிதாவானவர் குழந்தையைக் காத்தி லேந்திக் கொண்டுவந்து, பந்து, மித்திர, பாகவதர்கள், சாதுக்கள் சூழ்ந்திருக்கும் சபையினிடமாக நின்று பின் வருகிறபடி பிரார்த்தனை செய்யவேண்டும்.

ஃ

“எனது வீட்டுக்குல தெய்வமாகவும், இஷ்ட தெய்வமாகவும் நம்பிப் பக்தியோடும் பணிந்து கொண்டாடும் அகிலாண்டகோடி பிரமாண்ட நாய

---

எதிர்ப்பு இருந்த இடத்தில் அது சமனமடைய இடமேற்படும்படி எவ்வளவு விளைந்துகொடுத்தாலும், ஒருமுறை எதிர்த்துக்கொண்டவர்கள் பிறகு உத்தம சிந்தையுடையவராவதில்லை. எந்த வகையிலும் கெடுதி செய்யவேகண் வைக்கிறார்கள்.

கனே! உமது திவ்ய ஸந்நிதானத்தில் எனது அருமையான இக்குழந்தைக்கு நாமகரணம் செய்ய ஆக்ஞாபிக்க வேண்டுகின்றேன். ஓ! மகிமை யுள்ள பிதாவே! அநாதரவான இந்த சிசுவை உலகத்தின் கொடிய அபாயங்களி னின்றும் விலக்கிக் காப்பாற்றி வந்த தன்றியில், நீரே இதற்கு அன்பில் சிறந்த அன்னைபோல், வாரியெடுத் துப் பாலூட்டிச் சீராட்டி நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியு மாகப் போஷித்தும் பாதுகாத்தும்வந் தமையால், இந்தச் சிசுவானது தினந் துக்குத்தினம் பல்கிப் பெருகி பிரபஞ் சத்தாரில் ஓர் பிரஜையாகவும், எனது குடும்பத்திற்கு ஓர் அங்கமாகவும் இருக் கப் பிரவர்த்தித்திருக்கின்றது. இனி இந்த சிசுவானது கேவலமான பாலை மாத்திரம் உண்டு உய்யாமல் பலம் தரும்படியான போஜனத்தை உட் கொள்ளவும், அந்தப் போஜன போஷணையினால் பெரியதாகி, அதற்கு இன்ன பெயரென்று உலகத் தார் அறிந்து அழைக்கும்படி நாம கரணமாகிய பெயரை இட்டுக்கொள் ளவும், இதோ நினது திவ்ய சந்நிதா னத்தில் வந்திருக்கிறது. இத்தன்மை யாகச் செய்த நினது மஹிமா பிரதா பங்களுக்கெல்லாம் எனது ஹிருதய பூர்வகமான துதிகளைச் செய்யவும், இந்தக் குழந்தையை நின் திருப்பாத கமலத்தில் அற்பிதம் செய்யவும் அநுக அநுக்கிரஹிப்பாய். ஓ! கருணா நிதியே! இந்தக் குழந்தையை ஆசிர்வதித்தும், இதற்குப் பொருத்த மான ஒரு பெயருமிட்டும், இன்றோடு இதுவும் எனது குடும்பத்தில் ஓர் பிரஜையாகப் பிரவர்த்திக்க அருள் புரிவாய். மேலும், இந்தச் சிசுவானது சிற்றின்பமானதும், சில நாள் இருந்து சீக்கிரத்தில் அழியக்கூடியதுமான இந்த உலக விஷயப்பற்றுகளில் விருத்தியாகும்போதே, பேரின்ப மும், பெருமை பெற்றதுமான பர லோக ஸஞ்சரிப்புக்கேற்ற சுஞ்ஞா னத்தையும் விர்த்தியாக்கிக்கொள்ள அருள் புரிவாய். ஓ! அகில விநோதா! இந்த அருமையான சிசுவானது உனக்கு உகந்த உத்தம புத்திரனாக வும், நினது பிரதாபத்தைப் பெரு மைப்படுத்தத்தக்க பரம பாகவதனாக வும் இருக்கப் போதித்துப் பழக்கி வைக்க எமக்குப் பலத்தைக் கொடுப் பாயாக. இந்தக் குழந்தையினால் பெற் றோர்களாகிய எமக்குப் பூரண சுக சந்தோஷ வாழ்வைக் கொடுப்பதன்றி யில், எமது குடும்பத்துக்கே ஓர் ஆப ரணமாக இருந்து பிரகாசிக்க அருள் புரிவாய். ஓ! சர்வலோக சரண்யா! எமது அருமையான இக்குழந்தையைக் கைவிடாமல் அதின் அருகே இருந்து நினது குன்றா வளம் பொருந்திய கருணையினால் பாதுகாப்பாய். இத னால் நினது பரிசுத்தமான மஹிமை யும் பெயரும் பல்லாண்டு பல்லாண் டாகப் பிரகாசிப்பதாக. ஓம்தத் ஸத்."

ஃ

குழந்தைக்கு அடியில் கண்டவித மாகப் பெயரிடல் வேண்டும், புரோகி தர் சுலோகங்கள் சொன்னாலும், நமக் குத் தெரியும்படி பின்வரும் விதமாய் சொல்லக்கடவோம். எப்படி யெனில்,

ஸர்வ வல்லமையுள்ள பகவா னுக்கு முன்பாகவும், பாகவதர்கள் பெரியோர்கள் முன்பாகவும், இக்குழந் தைக்கு ஸ்ரீமான்————அல்லது

---

பணஉதவிகளை ஓயாமற் பெற்றுக்கொண்டு பிறகு எந்த உதவியுமே செய்யவில்லையென்று சாதிப்போர் பலர் உண்டு. ஆதலின், எந்தப் பண உதவியிலும், அவர்களிடம் ஒரு கையெழுத்து ரசீது பெறுவது மேல். பின் னுக்கு அவர்களின் வாயை யடக்க அது உதவும்.

ஸ்ரீமதி————என்றும் பெயரிடுகின்றேன். பூரணானந்தமயமான பகவான் இக்குழந்தையை ஸகல சுகபோகங்களையும் பெற்று வாழுமாறு ஆசீர்வதிப்பாராக, என்று சொல்லவேண்டும். ஃ

பிறகு சுகந்த மலர்களால் தொடுக்கப்பட்ட புஷ்பமாலையைக் குழந்தையின் கழுத்தில் தரிப்பித்துப் பிரியமான ஸ்ரீமான்————அல்லது ஸ்ரீமதி————யைப் புருஷோத்தமராகிய பகவானுடைய பெயரால் ஆசீர்வதிக்கிறேன். நீ சுகத்துடன் சிரஞ்சீவியாக வாழ்வாயாக என்று சொல்லி முத்தமிட்டு ஆசீர்வதிக்கவேண்டும்.

முடிவில் அருகிலிருக்கும் பந்துமித்திராதி அடியார்கள் அனைவரும், சாந்தி, சாந்தி, ஹரி ஓம் என்று சொல்லவேண்டியது. பிறகு வாழ்த்துகளும் சமயத்திற்கேற்ற கீதங்களும் பாடலாம்.



## மார்பில் கைபோட நெருங்கல்.

ஒருவர் நடந்துகொள்ளும் அன்பை நோக்கி, அவரது வருகையைப் பிரியமா யேற்றுப் பாராட்டினால், அவரோ நம்மை வசப்படுத்திவிட்டதாக நினைத்துக்கொள்கிறார். நமது கற்பைக்கூட அந்தரங்கமாய் நாம் அவருக்குக் கொடுத்துவிடுவோமென்று எண்ணிவிடுகிறார். அந்த நினைப்புக்கேற்ப நம்மிடம் அதிகமாக அவர் நெருங்குகிறார். நாம் நமது சயன அறையில் ஒரு சாமான் எடுக்கச் சென்றால், அவரும் அங்கு வந்து நம்மைப் பிரீதியுடன் பார்க்கிறார். அந்த அறையின் அருகே அவர் வருவது தகுமா? எவ்வளவோ ஸம்சயத்திற்கு இடந்தந்துவிடக்கூடிய அடாத செயலன்றோ? என்னென்னவோ வெகுமதிகளெல்லாம் நமக்குக் கொண்டுவருகிறார். அதில் நாம் மயங்குவதாக எண்ணுகிறார். கடைசியில் நமது மார்பில் பட்டும் படாத விதமாய்க் கைபோட நெருங்குகிறார். இத்தகையோரது கண்களைக் கவனிப்பினே அவர்களின் ஈனச் செய்கை தெரிந்துவிடும். ஒன்றை இச்சித்து அதற்காக அன்பு பாராட்டுவோரை அந்த நிமிஷமே அகற்றி விடுவது நன்மை. ஆத்மாவை ஆத்மா விரும்புந் தன்மையில் களங்கமற்றுப் பாராட்டும் அன்புதான் உயர்ந்தது. மற்ற அன்பில் ஏமாறாதீர்கள். பொதுவாக ஆடவர் கூட்டத்தையே நம்பாதீர்கள்.

*சமயத்திற்குக் கூடஇருந்து, நான்குபக்கத்திலும் தன்னைப்பற்றிப் பழித்தும் இகழ்ந்து பேசுவதையெல்லாம் தாங்கிக்கொண்டு ஒத்தாசை செய்யக் கூடிய நண்பர் ஒருவர் இருவராகத்தான் இருப்பர். மற்ற நண்பர்களெல்லாம் அந்த சமயத்தில் மெதுவாக விலகுபவர்களேயாவர்.*

# லண்டன் நகரத்துக் காட்சிகள்.



நம்மவர்கள் அதி காலையில் நான்கு மணிக்கே எழுந்திருப்பதும், நதி தீரங்கட்குச் சென்று ஸ்நானம் செய்வதும் சாதாரண வழக்கம். லண்டன்மா நகரத்திலோ காலை எட்டுமணிக்குத் தான் கண்விழிக்கின்றனர். இவர்கள் துயில் நீங்கிய வேளையில் வீட்டுக்கு வெளியில் வண்டிகள் செல்லும் ஓசையும், ஜனங்களின் இரைச்சலும் செவியிற் படுகின்றன. சூரியன் தன்னுடைய உக்கிரகத்தைச் செலுத்துவது அபூர்வம். குளிரின் மிகுதியால் எவரும் கனத்த ஆடைகள் தரித்திருப்பதைக் காணலாம். தளம்போடாத ரோட்டு எதுவும் கிடையாது. வானளாவி ஓங்கி நிற்கும் வீடுகளை நோக்கின் ஒன்றுபோலவே மற்றொன்றுமிருக்குமாதலின் தான் இறங்கியுள்ள வீடு இன்னதுதான் என்று அடையாளம் கண்டுபிடிப்பதும் கஷ்டமாய் விடும். யாவும் ஆறுமெத்தைக் கட்டிடங்களும், அதற்கு மேற்பட்ட கட்டிடங்களுமாகவே தென்படும். லண்டன் நகரத்தின் சுறுசுறுப்பே ஒரு மகத்துவம் பொருந்தியது. எதை நோக்கினும் புதுமையே; விநோதமே. தெருக்களில் நடந்து செல்வதென்பது அதிபிரயாசையே. க்யாப் (Cab) என்னும் கோச் வண்டிகளை ஓயாது பார்க்கலாம். வண்டியைக் கோச்மான் பின்னாலிருந்துகொண்டு ஓட்டுகிறான்.

ஃ

அதோ அங்கே ஒருவர் தம் கையைத் தூக்கியதும் ரஸ்தாவை நோக்கிவந்த எல்லா வண்டிகளும் அப்படியே நின்று விடுகின்றன. அவர்தான் போலீஸ் சேவகர். வண்டிகளை ஒழுங்காகச் செல்லவிடுவதில் அவரது கவனிப்பு வெகு கூர்மையானது. எந்த ரோட்டின் பக்கமும் கால் நடையாகச் செல்வோருக்கென்று பக்க வழிகள் இருபுறமும் அமைக்கப்பட்டிருக்கும். லண்டன் பட்டணத்தில் வீடுகளுடையவும் ஷாப்புகளுடையவும் அநேக பாகம் பூமிக்குள் கட்டப்பட்டிருக்கும். நிலதளத்துக்குக் கீழே ரயில் வண்டிகள் லண்டன் முழுதும் வட்டம் சுற்றிக்கொண்டு ஓடுகின்றன. ஒவ்வொரு ஐந்து நிமிஷத்திலும் ஒரு புதிய ரயில்வண்டி புறப்படத் தயாராக இருக்கும். லண்டன் நகரத்தைக் குறித்து எவ்வளவு புஸ்தகங்கள் வாசிப்பினும், நேரிற் காண்பதுபோல் விளங்கமாட்டா.

ஃ

"குடிக்கூலிக்கு அறைகள் நாற்காலி முதலிய சாமான்களால் ஒழுங்குடன் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன" என்று எழுதியிருக்கும் விளம்பரப் பலகைகள் வெளியில் தொங்கிக்கொண்டிருக்கும். "இரண்டு

---

ஒருவன் தன் கஷ்டங்களைத் தெரிவித்து உதவிக்காக ஓரிடத்திற்குக் கடிதம் எழுதுகிறான். அங்கிருந்து விடை வருவதேயில்லை. மானியாகிய இவனும் அந்த ஜாடையறிந்து மௌனமாய் விடுகிறான். மறுபடி எழுதுவதில்லை.

கூலி விருந்தாளிகளுக்கு இடமிருக்கிறது; வந்தால் குடும்பத்திலொருவனாகவே பாவிக்கப்படுவார்கள்'' என்று சாதுர்யமாக விளம்பரப் பலகைகள் போடுவதுமுண்டு. வீட்டை வாடகைக்குவிட்டு ஜீவிப்பதையே சில பெண்கள் ஒரு தொழிலாகக்கொண்டிருக்கிறார்கள். வாரம் ஒருமுறை குண்டூசி முதற்கொண்டு விலை போட்டு ஒரு பில் குடிவந்தவரின் மேஜையின்மேல் வைத்து விடுவாள். "மேஜைமேல் துணிகிழிந்து போனதற்கு இரண்டு பென்ஸு; இறைச்சி குழம்புக்கு ஆறுபென்ஸு''—என்று இவ்விதம் கணக்குகள் கொடுக எழுதப்பட்டிருக்கும். சாப்பாட்டிற்குப் போடப்படும் கிரயம்வேறு; ஸ்நானம் செய்வதற்குப் போடப்படும் கிரயம் வேறு. ஸ்நானம் செய்வதற்கென்றே பொதுவான கட்டிடங்கள் இருக்கின்றன. அங்கு அரை, ஒரு ரூபாய் கொடுத்தால் வென்னீரிலோ, தண்ணீரிலோ சௌகரியமாய் ஸ்நானம் செய்யலாம். நமது ஊர் தலைப்பாகை லண்டனுக்கு வெகு அசங்கிதமாகத் தோற்றுவதன்றி, ஜனங்களும் பரிகாஸமாக உற்று நோக்குவார்கள்.

ஃ

ஹோட்டல்களில் பரிமாறுவது புருஷர்கள் மட்டுமன்று: ஸ்திரீகளுங்கூட இவ்வேலைக்கு அமர்த்தப்படுகிறார்கள். அப்பெண்களின் களையாயுள்ள முகம் அவளுடைய எத்தனையோ குற்றங்களை மறைத்துவிடும். உடுக்கும் உடைகளைக்கொண்டு அவரவர்களின் அந்தஸ்தை யறிந்துவிடலாம். உடையைப் பார்த்தவுடன் இவன் வேலைக்காரன் என்று சொல்லிவிடலாம்.

ஃ

லண்டன் நகரத்தில் அதிகாலையில் எழுந்திருப்பவர்களில் தெருப்பெருக்குகிறவன் ஒருவன். இவன் எந்தத் தொழிலிலும் ஈடேறாதவர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவன். ஆயினும் உழைக்கிறானாதலின் சோம்பேரிகளைவிட இவன் உயர்ந்தவனே. நல்ல சட்டையைவிட நல்ல சாப்பாட்டையே அதிகமாகக் கவனிப்பான். மற்றொரு உழைப்பாளி பூட்ஸுக்கு வர்ணம்பூசி அதை அழகுபடுத்துகிறவன். தெருவழியே செல்லுகையில் எதற்காகவேனும் ஒருபக்கம் நிற்க நேரும்போது இவன் எதிர்ப்பட்டு அந்த நிற்பவரை வேண்டிக்கொண்டு அவர் காலிலுள்ள பூட்ஸுக்கு வர்ணம் பூசி நேர்த்திபடுத்திவிட்டு அவர் தரும் பணத்தைப் பெற்றுக்கொள்வான். மற்றொரு சுறுசுறுப்புள்ள ஆள் பூச்சிறுமி. இந்த எளிய பாலகி தன் கூடைநிறைய ரோஜா புஷ்பக் கொத்துகளை வைத்துக்கொண்டு தனக்கு முன்பாகத் தெருவில் எதிர்படுவோரிடம் வெகு பிரியமான புன்னகை தெரிவித்து அவர்களின் சட்டையில் ஒரு ரோஜா புஷ்பக்கொத்தைச் சொருகிவிடுவாள். அவர்களும் மறுக்கமுடியாமல் மகிழ்ந்து சிறுமிக்கு அதன் விலையைக் கொடுத்துச் செல்வர். மற்றொரு அதிகாலை உழைப்பாளி தபாற்காரனுவன். கதவு தட்டப்படுவதைக்கொண்டே இன்னாரென்று சொல்லிவிடலாம். ஒருதட்டு வியாபாரி; இரண்டு தட்டு தபாற்காரன்; இரண்டு இரட்டித்த தட்டு தந்தி கொண்டுவரும் சிறுவன்; முதலில் ஒரு தட்டும், பிறகு பல தட்டுகளும் கேட்பின்எவரோ காண வந்துள்ளாரென்று ஏற்படும். (தொடரும்.)



ஒருவன் கொடுக்கிறேன் என்றதும் நம்பிவிடுவதற்கில்லை. அவன் கொடுத்தது இவன் கைக்கு அது வந்தபோதுதான் நிச்சயம்.

# கீர்த்தியினால் கஷ்டம்.



வக்கீல் ராம்தாஸ் நாற்காலியின் மீது உட்கார்ந்துகொண்டிருக்கையில் மாதவர் என்பவர் கையில் ரிஜிஸ்தர் புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு அங்கு வருகிறார்.

**ராம்தாஸ்:**—எங்கு வந்தீர்? என்ன வேண்டும்?

**மாதவர்:**—ஐயா, தாங்கள் ஒரு பெரிய தேசஹித மனிதர்—

**ராம்தாஸ்:**—இதுதான் எல்லோருக்கும் தெரிந்த விஷயமாயிருக்கிறதே. வந்த சங்கதியை முதலில் சொல்லும்.

**மாதவர்:**—தாங்கள் பொதுஜன நன்மையைக் கருதி உயிரையும்—

**ராம்தாஸ்:**—ஆம், உயிரையும் மதியாமல் வக்கீல் வேலையில் உழைத்து ஜீவிக்கிறவன். இதைச் சகலரும் அறிவர். இதைப்பற்றி உமக்கென்ன கவலை?

**மாதவர்:**—தாங்கள் பெரிய ஸங்கீதாபிமானி.

**ராம்தாஸ்:**—ஸங்கீதம் எல்லோருக்குமே இனித்துவிடுவதில்லை.

**மாதவர்:**—ஆரியாவர்த்தத்தில் சங்கீத வித்தையின் பிரதம ஆசாரியர் பாதமுனி—

**ராம்தாஸ்:**—சரி, பாதமுனியின் மேல் ஏதாவது பிரியாது செய்ய வேண்டுமா? இல்லாவிடில் உமது பிரஸங்கத்தை நிறுத்திக்கொள்ளும்.

**மாதவர்:**—சில விஷயங்களை விளக்கிக் கூறவேண்டியிருக்கிறது—

**ராம்தாஸ்:**—அதிக விஷயங்கள் கேட்க வக்கீல்களுக்கு நேரமிருப்பதில்லை.

**மாதவர்:**—அவ்வாறாயின் சுருக்கிக் கூறுகிறேன். தாங்கள் "சங்கீதாபிவிருத்தினி சபை"க்கு—

**ராம்தாஸ்:**—அந்த சபையில் உபன்யாசம் செய்ய வேண்டுமா?

**மாதவர்:**—இல்லை, ஐயா, அந்த சபைக்கு—

**ராம்தாஸ்:**—சரி, அந்த சபைக்கு அக்கிராஸனாதிபதியாயிருக்கவேண்டுமா?

**மாதவர்:**—அப்படியுமில்லை—

**ராம்தாஸ்:**—பின்னர் என்னதான் செய்யவேண்டுமோ? பணத்தைக் கலகலவென்று வாங்குவதிலுள்ள ஓசையின் இனிப்பு எனக்கு சங்கீதத்திலுண்டாவதில்லை.

**மாதவர்:**—தாங்கள் எந்த வேலையும் செய்யவேண்டாம். இந்த ரிஜிஸ்தர் புஸ்தகத்தில் சங்கீதசபைக்கு ஒரு சந்தாவுக்குக் கையொப்பம் வைக்க—

**ராம்தாஸ்:**—சந்தாவா?—கையொப்பம் வைக்கவா? ஏதோ பெரிய மனிதன்போல் காணப்பட்டாயே.

---

*அனுதாபமும் அன்பும் மழுங்கியிருந்த இடத்தில் அது உயிர்பெற்றெழச் செய்வதற்கு எவ்வளவோ பிரயாசைப்பட்டபோதிலுங்கூட அது ஒழுங்குபட்டு வருவதில்லை. வரினும்முன்போல் பிரகாசிப்பதுமில்லை.*

என்னவோ கேசில் சிக்கிக்கொண்டிருக்கிறாய்; உன்னிடமிருந்து ஏதாவது பணம் வரும் என்றல்லவோ எண்ணினேன். சந்தாவா?—உன் ரிஜிஸ்தர் புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு இப்பொழுதே ஓடு. இல்லாவிடில் பலவந்தமாய் வீட்டிற்குள் நுழைந்ததாகப் போலீஸ் கேஸ் தொடருவேன்.

ஃ

மாதவர் மிக்க மனவெறுப்புடன் திரும்பினார். சந்தா கேட்டால் இவ்விதமா செய்கிறாயென்று தமக்குள் சொல்லிக்கொண்டு வெளியில் வந்து, தினசரிப் பத்திரிகைகளின் காரியஸ்தலத்திற்குச் சென்று அங்கு ஒரு செய்தியைப் பிரசுரிக்கக் கொடுத்தார்.

## II

மறுநாட் காலையில் ராம்தாஸ் தமக்கு வந்த பத்திரிகைகளையெல்லாம் பார்த்து வியப்புற்றார். எந்தப் பத்திரிகையை எடுப்பினும் அவற்றிலெல்லாம் சங்கீதாபிவிர்த்தினி சபைக்கு ராமதாஸ் 5000-ரூபாய் கையொப்பம் வைத்தாரென்று மாதவர் என்போர் வெளியிட்டிருப்பதைக் கண்டார். இது பணம் தராமலே இலவசத்தில் சம்பாதித்த பெரிய கீர்த்தியென்றும், வக்கீல் தொழிலில் எவ்வளவு சம்பாதித்தால் இவ்வளவு பெருந்தொகை நன்கொடையாகத் தரக்கூடும் என்று ஜனங்கள் தன்னைப்பற்றிக் கனத்த மதிப்பும் விஸ்வாசமும் கொள்ளலாமென்றும், அந்தக் கௌரவத்தால் இரட்டிப்புப் பீஸ் கிடைக்காவிடினும் அதிகமான கக்ஷிக்காரர்கள் தன்னைத் தேடிவரலாமென்றும், இனி தமக்கு நற்காலந்தானென்றும் எண்ணியவாறு ஆனந்தித்துக்கொண்டிருந்தார். அத்தருணத்தில் குமாஸ்தா உள்ளே வந்தார்.

**குமாஸ்தா:**—தாங்கள் சங்கீதாபிவிர்த்தினி சபைக்காக 5000-ரூபாய் நன்கொடையளித்தீர்களா?

**ராம்தாஸ்:**—(தலையைச் சொறிந்து சிரித்துக்கொண்டு) ஏ! அதெல்லாம் வீண் புரளி. எவன் உனக்குச் சொன்னது? கிடக்கட்டும்; நான் கொடுத்திருந்தால் அதனாலென்ன? இவ்வளவு தடபுடலெதற்கு?

**குமாஸ்தா:**—ஆஹா! எவ்வளவு பணிந்த ஸ்வபாவம்! ஐயாயிரம் ரூபாய் தானம் கொடுத்துவிட்டு அத்தானத்தை மறைக்க எத்தனிப்பது எவ்வளவு உயர்ந்தவரென்பதை நன்கு தெரியப்படுத்துகின்றது.

(இச்சமயத்தில் வேலைக்காரன் அங்கு வருகிறான்.)

**வேலைக்காரன்:**—கீழே தங்களைக் காணப் பலர் வந்திருக்கின்றனர்.

**ராம்தாஸ்:**—(மனதிற்குள்) ஆஹா! நமது பெயர் அதற்குள் பரவி விட்டது. கக்ஷிக்காரர்கள் நம்மையே வக்கீலாக ஏற்படுத்திக்கொள்ளக் கூட்டமாய் வந்திருக்கிறார்களாக்கும். இந்த ஒரே நாளில் தானே ஒரு வருஷ ஸம்பாத்தியமும் கிடைத்து விடப் போவது நிச்சயம். (ஸந்தோஷ முகத்துடன் வேலைக்காரனைப் பார்த்து) அடே! எல்லோருக்கும் தாம்பூலம் அளித்து ஒவ்வொருவராய் என்னிடம் அனைவரையும் அனுப்பிவை.

---

இதோ நாளைக்கு ஊருக்குப் புறப்படுகிறேனென்பவர்களெல்லாம் தங்கள் காரியம் முடியாதிருக்கும்போது ஒருபோதும் பிரயாணப்படப் போவதில்லை. எல்லாம் தளுக்கு வார்த்தைகள் தான். தங்களுக்கு ஆகவேண்டிய காரியத்தை அவசரப்படுத்திப் பெறுவதற்குச் செய்யும் சூழ்ச்சி இதுவாகலாம்.

III

(ஒருவர் வருகிறார்.)

**ராம்தாஸ்** :—(அவருக்கு ஒரு நாற்காலியைப்போட்டு) வாருங்கள், உட்காருங்கள். தாங்கள் புகையிலை போடுவதுண்டா? (வேலைக்காரனை நோக்கி) அடே! இவருக்கு வாஸனைப் புகையிலை கொண்டுவந்து கொடு.

**வந்தவர்** :—(மனதிற்குள்) ஆஹா! என்ன தயாள ஸ்வபாவம்! இத்தகைய மஹானிடம் சகாயம் கிடைக்காவிடில் வேறு எவரிடம் தான் கிடைக்கப் போகிறது!

**ராம்தாஸ்** :—தாங்கள் வந்த காரணம் யாதோ?

**வந்தவர்** :—தங்கள் உதாரகுணம் தேச முழுதும் பிரஸித்தமாயிருக்கிறது—

**ராம்தாஸ்** :—அதை யெல்லாம் நம்பாதீர்கள்.

**வந்தவர்** :—ஆஹா! என்ன வணக்கம்! முதலில் நான் தாங்கள் பெயரை மட்டுமே கேட்டிருந்தேன். இன்று தங்களை நேரிற்கண்டதால் கண் காதுகளுடைய சண்டை தீர்ந்துவிட்டது.

**ராம்தாஸ்** :—அது இருக்கட்டும். ஏதாவது வழக்கு கொண்டுவந்திருக்கிறீர்களா?

**வந்தவர்** :—எங்களுடைய பாரத சபைக்காகக் கொஞ்சம் சந்தா தயவு செய்து—

**ராம்தாஸ்** :—சந்தாவா?—என்னிடம் பணம் பிடுங்கவா வந்தீர்? ஓடு, ஓடு, ஓடிப்போம்—

IV

(மற்றொருவர் வருகிறார்.)

**ராம்தாஸ்** :—தங்கட்கு என்ன வேண்டும்?

**வந்தவர்** :—தங்களின் தேசோபகார தானம் எங்கும் கொண்டாடப்படுகிறது.

**ராம்தாஸ்**,—அதிருக்கட்டும். வந்தது எதற்காக?

**வந்தவர்** :—நாங்கள் ஒரு சபையை ஸ்தாபித்திருக்கிறோம். அதற்குத் தாங்கள் தயவுசெய்து சந்தா—

**ராம்தாஸ்** :—மறுபடியும் சந்தா பேச்சுதானா? சீச்சீ! ஓடும் ஓடும்.

V

(இன்னொருவர் வருகிறார்.)

**ராம்தாஸ்** :—என்னுடைய பரோபகாரம்—தானம்—பிரஸித்தி—முதலியவற்றைப்பற்றி ஏற்கெனவே மற்றவர்கள் பேசியாய் விட்டது. நீர் அதைப்பற்றிப் பேசாமல் வந்த காரியத்தைச் சுருக்கிச் சொல்லும்.

**வந்தவர்** :—ஒரு லைபிரெரி ஏற்படுத்தியிருக்கிறோம். அதற்கு சந்தா—

**ராம்தாஸ்** :—சந்தாவா? ஓடு, ஓடு, இன்று என் வீட்டில் பணம்பிடுங்கும் கொள்ளைக்காரர்களாகவே கூடியிருக்கிறார்கள்போ லிருக்கிறதே!

VI

(வந்தவர் மூச்சைப் பிடித்துக்கொண்டு ஓட, பழைய நண்பனான மதன் மோகனன் வருகிறான்.)

---

உண்மையாகவே விசுவாசமுள்ள மனிதன் தனக்குக் காலசகாயமாகப் பெரும் உதவிகளைச் செய்தவர்களிடம் அதிகமாகப் புகழ வாய் திறப்பதில்லை. அந்த உதவிகளுக்கு அவன் மனம் நாணுவதனால் அதிகமான நன்றி வார்த்தைகள் வெளியில் வருவதில்லை. ஆயினும் ஜீவகாலமுற்றும் அந்நன்றியைத் தன் நெஞ்சில் நினைத்து வாழ்த்துகிறான்.

மதன் மோகனன் :— நண்பா! உன்னைக் காண அதிக சந்தோஷம். உனது பெரிய நன்கொடையைக் கேட்டு மகிழ்ந்து ஓடி வந்தேன்.

ராம்தாஸ்:—ஏதாவது நான் பிழைப்பதற்கு வழக்கு கொண்டுவந்திருக்கிருயா?

மதன்மோகனன் :—நீ ஒரு தர்மவான். அத்துடன் வேடிக்கையாகப் பேசும் ஒரு தமாஷ் மனிதன். இவ்வூர் பையன்கள் பலர் சேர்ந்து ஒரு சபையை ஸ்தாபித்திருக்கிருர்கள்—

ராம்தாஸ் :—அந்த சபைக்கு சந்தா வேண்டுமென்று வந்தாயா? சந்தா பேச்சு எடுத்தால் நமது நேசத்திற்குப் பங்கம் ஏற்படும். முதலிலேயே இதைச் சொல்லி விட்டேன்.

மதன்மோகனன் :—நீ ஒரு வீண் சங்கீத சபைக்கு டம்பத்திற்காக 5000—ரூபாய் கொடுப்பாய். என் போன்ற சிநேகிதர் சபைக்கு ஐந்து ரூபாய் கூடக்கொடுக்க மாட்டாய். எந்த மூடன் இனி உன் வாசலில் கால் வைப்பான்? (என்று கோபித்துச் செல்கிருன்.)

VII

(வேறொருவர் வருகிறார்.)

வந்தவர்:—ஐயா ரூபாய்—

ராம்தாஸ்:—ரூபாயா?—சந்தாவா? ஓடு, ஓடு. ரூபாய், போய், பீப்பாய், ஒன்றும் கொடுக்கமுடியாது, போ! போ!

(அவன் திகைத்து ஓடுகிறன்.)

குமாஸ்தா :—அம்மனிதனை என் துரத்தினீர்கள்? தங்களுக்குக் கொடுக்கவேண்டிய பீஸ் பணத்தையல்லவா கொண்டுவந்தான்.

ராம்தாஸ்:—அப்படியா? அவனைப் போய் அழைத்துவா. ஓடு! ஓடு!

சிறிது நேரத்துக்குப் பிறகு குமாஸ்தா திரும்பிவந்து அவன் அகப்படவில்லையென்று தெரிவிக்கவும், ராம்தாஸின் முகம் வாடுகிறது. இச்சமயத்தில் கையில் தம்பூரா எடுத்துக்கொண்டு ஒருவன் வர, அவனைத் தொடர்ந்து சிலர் வருகின்றனர். வந்தவன் தம்பூரா மீட்டிப் பாடுகிருன்.

VIII

வந்தவன்:—உலகமெங்கும் புகழ் பெற்ற—

ராம்தாஸ்:—நாசமாய்ப் போக இதென்ன தொல்லை?

வந்தவன்:—(பாடுதல்) ட இஇஇஇ—

மற்றொருவன்:—தா- ஆ-ஆ-ஆ-ஆ!-

வந்தவன்:—ஸ-ரி-க-ம-ப-த-னி-ச ஆ-ஆ-ஆ—

(தபாலாவுடன் ஒருவன் வருகிறன்.)

வந்தவன்:—ஐயா, சங்கீதத்திற்குப் பக்க வாத்தியம் இருந்தால் தான் ஸ்வாரஸ்யமா யிருக்கும். இதோ நான் என் வித்வத்தைக் காட்டுகிறேன். (தபாலா அடிக்கிருன்.)

(இன்னும் சிலர் வருகின்றனர்.)

1-வது வந்தவன் :—ஐயா, பாட்டுக்கு இனம்—

2-வது வந்தவன்:—தேசப்பிரஸன்ன பாபுவே! எங்கள் சபை—

---

ஒரு மனிதனுடைய பிரக்யாதியும் புகழும் எவ்வளவு இருந்தபோதிலும் அது வெளியில் மட்டுந்தான் செல்லுகிறது. அவன் வீட்டிலோ அவனை வெகு கேவலமாக நடத்துகிருர்கள். அவனது கீர்த்தியை வீட்டில் மதிப்பாரில்லை.

3-வது :—தங்களுடைய உதார குணம்—

4-வது:—தேச நலத்திற்காகத் தாங்கள்—

5-வது:—என் தியாகராஜ கீர்த்தனையைக் கேளுங்கள்—இஇஇஇஇ.

ராம்தாஸ்:—(தனக்குள்) போதும் போதும்! பெரிய தொல்லை! வெகு சாதுர்யமாக அந்தப்பயல் பத்திரிகைகளில் பொய்யாக வெளியிட்டு எனக்கு ஓயாத் தொந்திரவையுண்டாக்கிவிட்டான். இது இனி இங்கே இருக்கமுடியாது. (குமாஸ்தாவைப் பார்த்து.) நான் என் மாமனார் வீட்டிற்கு ஓடிவிடுகிறேன். இவர்களெல்லாம் பணம்பிடுங்கும் நாய்கள்! நாலு பணம் வரவும், பெட்டியில் ரூபாய்கள் சேரவும் வழி சொல்லுபவரைத்தான் காணேம். சில வாரம் வரையில் மாமனார் வீடுதான். என் விலாஸத்தை ஒருவருக்கும் சொல்லவேண்டாம்.

என்று கூறிவிட்டு உடனே புறப்பட்டுப் போய்விடுகிறார். வந்தவர்களும் ஏமாறிச் செல்லுகின்றனர்.

**கீர்த்தியைத் தாங்க யோக்கியதையற்றோர் வலியக் கீர்த்தி கிடைப்பினும் இவ்விதமேதான் தரித்திரமுகமாய்க் கஷ்டப்படுவர்.**

## அவன் மனம் ஆறவில்லையே! என் செய்ய?

ஒருவன் தனக்கு மற்றவர்கள் செய்த தீங்குகளையும், நம்பிக்கைத் துரோகங்களையும், படுகுழி பறித்த சம்பவங்களையும் ஆனமட்டுக்கும் மறந்துவிடவே முயல்கிறான். மன்னித்துவிட்டுப் பழயபடி குலாவியிருக்கவும் ஆசைப்படுகிறான். களங்கமற்ற மனத்துடனே பேசவும் எண்ணுகிறான். ஆனால், ஒவ்வோர் சமயத்தில் பழய ஸம்பவங்களையும், தன்னை அடியோடு கெடுக்கச் சூழ்ச்சி செய்தவைகளையும் நினைத்துக்கொண்டால் அவன் மனம் லகுவில் ஆறமாட்டேனென்கிறது. அவனுடைய ரத்தம் கொதிப்பேறுகிறது; அவனால் எதையும் மறக்க முடியவில்லை. எவ்விதம் பழய பயங்கரச் செயல்களை மறப்பதோவென்று தவிக்கிறான். "அவனை மன்னிக்கும்படியாக எனது கடமை கற்பிக்கிறது; ஆனால் என் மனஸாக்ஷி அதை அங்கீகரிக்க மறுக்கிறது" என்று ஆலிவர் கோல்ட் ஸ்மித் என்பவர் கூறியது இவன் விஷயத்திற்கு நன்கு பொருந்தும்.

பூர்வ இந்தியாவில் ரஜபுத்ரர்கள் சூரர்களாயிருந்தும் ஒன்றுசேராததாலும், ஒருவருக்கொருவர் மாச்சரியம் பாராட்டியதாலுமே அழிந்துபோனார்கள். இது தற்கால இந்தியாவுக்கும் பொருந்தும். ஒரு சிறு குடும்பத்திற்குக்கூட இது பொருந்தும்.




## தமக்கையின் பிரிவாற்றாமை.

அக்காவோ! என்னருமை அக்காவோ!
எனக்கின்பும் அறிவும் ஊட்டி
இக்காரும்[1] மொழிகளினுல் இதமுரைத்தாய்!
இன்று(ன்)உடல் எங்கே? எங்கே?
மைக்காலன் நின்னுருவை மறைத்தனனே
என்னினு(ம்) என் மனத்திலே நீ
எக்காலும் அலகிலா(து) இலங்குவதை
அவன் மறைக்க இயல்வதாமோ? (1)

தந்தையோடு தாயாகித் தமக்கையுமாய்
எனக்(கு) இன்பம் தந்துநின்ற
விந்தைமிகும் அன்புடையாய்! விண்ணுற்ருய்!
எனைத் தனியே விடுத்திட்டாயே!
சிந்தை கலங்கிடில் என்னைத் தேற்றுபவர்
எவர் அக்கா? சிறியனேன் இங்(கு)
எந்த விதம் இன்புறுவேன்? எவர் என்பால்
பரிவுடையார்? இயம்புவாயே! (2)

செம்பொருள்கள் பத்ரிகையில் செறிந்திருப்பின்
கத்திரித்துச் சேர்த்துக் கட்டி
உம் பரிவால் அனுப்பிவைத்து உவகை எனக்(கு)
அவற்றில் மிக உறுவித்தீரே!
தம்பி என் மேல் பரிவுடையீர்! சான்ருேர் தம்
நேயம் மிக சாரப்பெற்று
இம்பர்[2] புகழ் பெறத் தூண்டி என்னை
வளர்த்தீர்! இன்று எங்கொளிந்தீர்? (3)

வேறு.

பிணியால் நலிந்து மனமே மெலிந்து
பெருவானடைந்த பெரியோய்!
அணியால் பொலிந்து அழகே மலிந்த
அதிரூப மெங்கு புகலாய்?

---

1. இக்கு ஆரும்=கரும்பு போன்ற; 2. இம்பர்=இவ்வுலகில்;

பணிவால் உவந்து மனமே குளிர்ந்த
பதி[3] நாளும் துன்ப முறவே
மணியே! குலந்தன் அணியே! மறைந்த
மதியே! இதெங்கள் விதியே! (4)

அக்கா! என் ஆசை அக்கா! தனித்து
அடியேனை விட்டு நெடுவான்
புக்காய்! என் நெஞ்சு பிரிவால் மிகுந்த
புண்ணுவ(து) எண்ணுகிலையே!
எக்காலம் உன் இன் சொற் கேட்பதம்ம!
இனி யாரெனக்கு துணையே?
இக்காலம் என்னை இனிதே திருத்தி
இன்பூட்டும் அன்பர் எவரே? (5)

வேறு

பூத உடல் துறந்தாய்! நின் புகழுடம்பு
மறைந்திடுமோ? புகன்ற சொற்கள்
மாதரசே! அடியேன்றன் மனத்தினின்றும்
விலகிடுமோ? வையம் தந்த
வேதன் எனை இங்கிருத்தி வேதனை
செய்தாலும்—அது விதி என்றாலும்
நாதன் திருவடி ஆணை நவில்கின்றேன்:
நினை மறவேன் நாளுந் தானே! (6)

அன்புருவே! எழில் மணியே! ஆனந்த
வாரிதியே! அரிய தேனே!
இன்ப மிகு செங்கரும்பே! இன்னொளியே!
மெல்லியலே! இனிய நாதன்
தன் பதங்கள் பணி மணியே! சத்துவநற்
குணக்குன்றே! தம்பி என்மேல்
என்றும் மிகப் பரிவுடைய என் அக்கா!
அவண் என்றும் இனிது வாழி! (7)

(ஒரு அன்பரது தமக்கையின் பிரிவுக்காக இது எழுதியது.)

ஆரியூர்—வ. பதுமநாப பிள்ளை.

3. பதி=கணவன்.

*சென்றதையும் வருவதையும்பற்றி நினைத்து வீண்காலம் கழிக்காமல், கண்ணின்முன் நின்றதையே கருதிக் கவனிக்கவேண்டுமென்று அறிந்து கொள். அதில் உனக்கு அதிக க்ஷேமம் உண்டு.*



# ஹாஸ்ய சஞ்சீவினி



மனைவி :—நாளைக்கு சனிக்கிழமை விரதமாயிற்றே. தோசைக்கு மாவு அறைக்கட்டுமா ?

கணவன்.—எந்த மாவும் அரைக்க வேண்டாம். எனக்கு மூன்று தோசை வைத்துவிட்டு நாலாவது தோசைக்கு நான் கேட்காதிருந்தால் உன் தோழிக்கு அதைக் கொடுக்கலாமே யென்று நினைக்கிற கவலையும் வேண்டாம். நான்காவது தோசையை நான் புசிக்கிறேனா, வைத்து விடுகிறேனா என்று நீ எதிர்பார்த்து நிற்கவும் வேண்டாம். தோசைக்கென்று இரண்டுபடி அரிசி, உளுத்தம் பருப்பு, அரைபடி, சுடுவதற்கு விறகு, ஒரு கிண்ணி நிறையத் துவையல், அதற்கு மேல் இட்டுக்கொள்ள எண்ணெய், நெய்-சக்கரை, அதைப் பங்கிடுவதில் வருகிற சண்டை, உண்ணப்போகும் சமயத்தில் நீ தலையிலடித்துக் கொண்டு ஒரு கலகம், தோசைக்குப் போட்டிருக்கிற தினத்தில் வந்து குந்துகிறவர்களுக்குத் தோசை உபசரிப்பு—இவ்வளவும் இல்லாதிருப்பதற்குக் காலையில் பட்டினியாயிருந்து மத்தியானத்தில் நல்லபசியுடன் புசித்துவிட்டால் ஒரு தொல்லையுமில்லை. இரவுக்குப் பச்சைஜலம் குடித்துவிட்டுப் படுத்தால் எந்தச் செலவும் சச்சரவுமின்றிப் பொழுது போய்விடும். ஆகவே, தோசைக்கு அரிசி போட வேண்டாம். பிறகு அரிசி ஆய்விட்டதென்று சொல்லவும் வேண்டாம்.

ஃ

தகப்பனார்:—உங்களுக் கெல்லாம் நான் ஏன் செலவிடவேண்டும்? அவரவர்களுக்கு வேண்டியதை அவரவர்கள் சொந்தப்பணம் வைத்திருந்து வாங்கிக்கொள்ளவேண்டும். அது இது வேண்டும் என்று என்னைக் கேட்பது சரியல்ல.

குழந்தைகள் :—எங்களை ஏன் அப்பா பெற்றீர்கள்? பெற்றுப்போட்டு விட்டு செலவு செய்வதற்கு அழுகிறீர்களே ?

ஃ

நண்பன்:—ரொம்பு நயமாக விற்கிறதே, இன்னும் அரையணுவுக்கு வாங்கிக்கொண்டுபோ.

நேசன்:—அதிகம் வாங்கினால் அதை என் மனைவி எதிர்வீடு பக்கத்து வீடுகளுக்குத் தருவாள். வாங்கிப் பயனில்லை. இவ்வளவு வாங்கியது போதும்.

ஃ

மனைவி:—இரவில் (தூக்கத்திலிருந்து விழித்து) யார் அது என்னைத் தொடுகிறது? என்ன தைரியம்?

கணவன் :—உஸ், சத்தம் போடாதே. நான்தானடி. என் காதைத் தொட்டுப் பார். கடுக்கன் அடையாளம் இருக்கும் !

ஃ

—"நீ சென்னப்பட்டணத்தை பார்த்திருக்கிறாயா ?"

—இல்லை. ஆனால், அங்கே நடக்கிற மோசங்களையும், ஏமாற்றுதல்களையும் கேட்டிருக்கிறேன். பட்டணத்துப் பேர்வழிகள் மிகவும் கைதேர்ந்தவர்களென்று சொல்லுகிறார்கள். ஃ

ஊரிலிருந்துவந்த புதியபெண்:— அவர் யாரு? உனக்கு என்ன வேண்டும்?

வீட்டிலுள்ள பெண்:— அவர் என் வீட்டுக்காரர்.

ஊரிலிருந்துவந்த புதியபெண்:— உன் வீட்டுக்காரரா? கிழவர்போலயிருக்கிருரே?— நீ அவருக்கு இரண்டாம்தாரமா?

ஃ

சேஷி:— அதோ பார், பிள்ளையாரம்மா; அவளுக்கு எத்தனை மாசம்?

குப்பி:— அப்படிச் சொல்லாதே. அவன் கேட்டால் சண்டைக்கு வருவான். இப்போது எட்டு மாசம் ஆச்சுது.

ஃ

குமாரன்:— அப்பா! கோயிலில் ஏதாவது வாங்கித் தின்னவேண்டுமே? காசு கொடு.

தந்தை:— இந்தா காலணு.

குமாரன்:— காசுவேண்டாம். நீயே கூடவந்து வாங்கிக்கொடு. அப்போது நான் கேட்டதெல்லாம் வாங்குவாய். காலணுவுக்கு மேலேயே கிடைக்கும்.

ஃ

மனைவி:— அவர்கள் வெறுங்கையுடன் வரவில்லையே. 12-வாழைக்காய்கள் வாங்கி வந்தார்கள்.

கணவன்:— 12-வாழைக்காயின் விலை 3-அணு ஆயிற்று. அவர்கள் எத்தனைநாள் இருந்து செல்வார்களோ? அந்த செலவுகளுக்கும் இந்த வாழைக்காய்க்கும் ஒரு கணக்குபோட்டுப் பார்த்தாயா?

ஃ

வீட்டுக்கு வந்த அம்மாள்:— என்னை உங்கட்குத் தெரியாதா? முன்பு நான் வந்திருக்கிறேனே.

வீட்டுக்காரர்:— எனக்குத் தெரியாததால் பாதகமில்லை. அதைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம். நீங்கள் தாராளமாக இவ்வேளைக்கு இங்கு புசித்துவிட்டுப் போகலாம்.

ஃ

கணவன்:— வாழையிலை எவ்வளவுக்கு வாங்கிவர? நேற்றைப்போல ஒரு அணுவுக்கா? வாங்குகிற வாழையிலையைக்கொண்டு இவ்வளவு காய்கறி சமையல் என்று தெரிந்துவிடும்.

மனைவி:— ஏதுவும் வேண்டாம். காபி பலகாரம் புசித்துவிட்டு எல்லோரும் போய்விடுவார்கள். பகலுக்குப் பழய சாதம் அதிகம் இருக்கிறது. இராவுக்குத்தான் சமையல்.

ஃ

நாயகன்:— இதென்ன? முன்பு மூன்று நாளிருந்துவிட்டு நேற்று காலையில்தான் காபி பலகாரம் புசித்துப்போனவர்கள் திரும்பவும் இன்று வந்துவிட்டார்களே. கூட்டம் 12-பேருக்கு மேலிருக்கிறதே?

நாயகி:— இரவு உற்சவம் பார்த்துவிட்டுக் காலையில் போய்விடுவார்கள்.

[நாளைக்குப் பலகாரம் வாங்குவது எட்டணுவுக்குக் குறையாதென்று எண்ணமிட்டபடி வீட்டுக்காரன் நித்திரைபோகிருன். வந்தவர்களுக்குத் தாங்கள் இப்படிக் கூட்டமாய் வந்ததே சரியில்லையென்று படுவதால் காலையில் எழுந்ததும் எல்லோ

---

சில உத்தியோகஸ்தர்கள் எந்த சந்தில் குடியிருந்தாலும் அவர்களின் வீடு ஊர்முழுதும் தெரிந்துவிடுகிறது. தங்கள் காரிய சாதனத்திற்காக அவர்களை வீட்டிற்குச்சென்று பார்ப்பவர்களும் பலர்.

ரும் பல்விளக்காமலே புறப்பட்டுவிட, வீட்டுராணி கணவனிடம் வந்து "அவர்கள் போகிறார்களே" என்கிறாள். கணவன் "போகட்டும்" என்கிறான். மனைவி காபி பலகாரம் புசித்துப்போங்கள் என்று அவர்களை வேண்டுகிறாள். பிறகு கணவனிடம் வந்து காபியாவது சாப்பிட்டுப்போகச் சொல்லுங்கள் என்கிறாள். கணவனும் "ஆமாம் காபியும் சாப்பிடவேணும்" என்கிறான். வந்தவர்கள் இந்தப் பாதி ராகமான அழைப்பைக் கேட்டுக்கொண்டே புறப்பட்டுப் போய்விடுகிறார்கள். மனைவிக்குக் கணவன்மேலே கோபம்! கணவனுக்கோ வந்த இத்தனைபேர்களில் ஒருவராவது தன்மீது அன்புள்ளவர்களல்ல என்றும், எல்லாம் அன்பற்ற கூட்டங்கள் என்றும் எண்ணம். மேலும், ஒருவர் இருவர் வந்தால் உபசரிக்கலாம். நேற்று ஒரு டஜன் கூட்டம் வந்துபோய், மறுநாள் இரவு அவ்வளவு கூட்டமும் திரும்பியும் விஜயம் செய்வதானால், வீட்டுக்காரன் என்ன செய்ய முடியும்? வேஷ்டி வாங்க விதியின்றி ஒரே வேஷ்டியைத் துவைத்துத் துவைத்துத் தினமும் கட்டும் கஷ்ட தரித்திர நிலையில் வீட்டுக்காரன் இருக்கையில் அவன்மீதும் குற்றம்பேச வழியில்லைதான். ஆனால், வீட்டு ராணியோ போகிறவர்களைக் கூட இரு இரு என்கிறாள். தன் கஷ்டத்தை மனைவி யறியவில்லையே என்று வீட்டுக்காரன் வருந்துகிறான். கைவறண்டு கடன் வாரண்டு வந்த பிறகு எந்த உறவினரும் எட்டிப் பாரார்—எந்த உதவியும் செய்யார் என்பது அநேகர் கண்டறிந்த பெரிய அனுபவம். ஏசிப் பழித்துக் கேவலப்படுத்தாதிருந்தால் அதுவே பெரிய உபகாரம். பந்து உபசாரம் வேண்டியதே; அதிலும் ஒரு எல்லை உண்டு.]

## உன்னாலேயே அது ஆகலாம்.

மிகப் பெரிய விஷயமென்று நினைக்கிற ஒரு சங்கதியை சாமான்யனாகிய நீயே செய்துவிடக்கூடியதாகவும் ஆகிவிடலாம். முயற்சித்துப் பார்த்தால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. அற்பர்களைக் கொண்டும், சாதாரணஸ்தர்களைக் கொண்டும் கடவுள் எத்தனையோ அற்புதங்களைச் செய்துவருகிறார். இதை வாசிக்கிற நீயே உன் ஸமூகத்திலுள்ள சீர்கேடுகளைச் சீர்திருத்தப் பிரயாசைப்படு. படிப்படியாய்ப் பெரிய விஷயங்களையும் முடிக்க உன்னைத் தயார் செய்துகொள். உலகத்தின் சீர்திருத்தக்காரரது சரித்திரங்களை வாசிக்குங்கால் சீர்திருத்தம் செய்தவர்களில் அநேகர் சாதாரண மனிதர்களாகவே இருந்திருக்கிறார்கள். பெரும் நூல்களை உலகுக்குக் கொடுத்த பிரபல ஆசிரியர்களும் எழ்மை நிலையிலிருந்துகொண்டே பசியுடன் அவ்வேலையைச் செய்திருக்கிறார்கள். முயற்சியின் வழியில் அதற்குமுன் எதிர்பாராத பெரிய சக்தியும் தோன்றும்.




## "நமது கடை"யின் தத்துவங்கள்.

இன்று கூடிய நமது கடையில் சபாஸ் வைர ஜோடிக் கடுக்கன் சங்கர நடேச கங்காதர கோதண்ட கல்யாணராம தீக்ஷிதரவர்கள் 'நமது கடை'யின் தத்துவங்களைப் பேசினார்:— "நமது கடை"யானது எவருக்கும் சொந்தமுள்ளது. யாரும் தத்தம் அனுபவங்களைக் குறித்துப் பேசலாம். செல்வரென்று எவருக்கும் அஞ்சுவது கிடையாது. ஏழையென்று எங்கக் கிழிந்த சொக்காய்க்காரரையும், அழுக்கு வேஷ்டியாளரையும் அவமதித்தது இல்லை. அழகாக க்ஷவரம்செய்து சிங்காரித்துக் கொண்டவர்களைத்தான் நமது கடைக்குள் வரவிடுவதென்பதில்லை. க்ஷவரம் செய்துகொள்ளாமைக்கு அநேக காரணங்கள் இருக்கும். சிலருக்கு க்ஷவரம் செய்துகொள்ளவே நேரம் அகப்பட்டிராது, காலையில் என்பார்; அப்போது ஒரு அவசர வேலைவரும், பகல் பதினொருமணிக்கு என்பார்; அந்த சமயமும் ஏதாவதொன்று குறுக்கிடும். பிறகு பசிவேளை வந்துவிடும். அதையும் சரி பார்த்துவிட்டு இரண்டு மணிக்கு க்ஷவரத்திற்குச் சென்றால் எந்த நாவிதனும் அகப்படான். வெறுமனே திரும்பும்படி நேரும் இவ்விதம் பல தினங்கள் சென்றுவிடுவதுண்டு. சிலருக்கு க்ஷவரத்திற்கென்று தக்ஷிணை ஸமர்ப்பிக்க இரண்டணா இல்லாதிருக்கும்; அணா இருந்தாலும் அதற்கொரு செலவு எதிர்பார்த்தபடியிருக்கும். ஆகவே, க்ஷவரம்செய்து கொள்ளாமைக்கு எவ்வளவோ காரணங்கள் பேசலாம். பிரார்த்தனைக்காக என்றும், இன்னும் வைதிக சம்பந்தமாயும் க்ஷவரம் செய்யாதோரும் எண்ணிலர். ஆதலின், க்ஷவரம் செய்துகொள்ளாமைக்காக நமது கடைக்குள் வரக்கூடாதென்று எவரையும் தடுத்ததில்லை. "உள்ளே வரக்கூடாது" என்பதாக, நமது கடையில் பலகை போட்டிருக்கவில்லை. எவரும் தாராளமாக வரலாம். பேசலாம். தமது ஆத்திரங்களைச் சொல்லித் தணியலாம். உலகத்தாருக்கும் நற்போதம் செய்யலாம். ஒருவரது புண்பட்ட அனுபவத்திலிருந்தும் பலவித புத்திமதிகளும், யோசனைக் குறிப்புகளும் வெகுவாகக் கிடைக்கக்கூடும் என்றார்.

ஃ

அதன் பிறகு அல்லா பிச்சை பேச எழுந்தார். "எவ்வளவு பணக்காரரா யிருந்தாலென்ன? படே படே பெரிய மனிதராக யிருந்தாலென்ன?—நல்ல மழைகாலத்திலுங் கூட விசிறி எடுத்து விசிறிக்கொள்ளுகிற பெருமைச் சீமானாக இருந்தாலென்ன? அவர்கள் மட்டில் அவர்க

---

எதற்கும் வக்கீலைக் கேட்டுத்தான் செய்வேனென்பவனை, இதற்குமுன் அவனை ஏமாற்றி நல்ல ருசியும் லாபமும் கண்டவர்கள் பகைக்கிறார்கள். ஒரே பிடிவாதக்காரன் என்று தூற்றுகிறார்கள்.

ளைப் பெரியவர்களாக நினைத்துக் கொள்ளட்டும். அவர்களின் ஆரவாரப் பெருமைகளை நாம் பொருட் செய்வதில்லை. அவர்களுடைய அன்பு முதலிய உத்தமகுணங்களுக்கன்றி மற்ற ஆடம்பரங்களுக்கு நாம் ஒரு மதிப்பும் கொடுப்பதில்லை. அவர்களுடைய சிமை மல்வேஷ்டியின் பளபளப்பில் நாம் பயந்ததுமில்லை. நம்மை எதிர்த்ததாகவாவது, ஏமாற்றியதாகவாவது, ஒப்பாரி உறவு பிடிக்க வந்ததாகவாவது தெரிந்தால் அவர்களை நமது கடை அங்கத்தினர்கள் இலகுவில் விடுவதில்லை. அவர்கள் நற்புத்திபெற்றுத் திருந்தும்படி சுடச்சுட அப்பம் நமதுகடை மூலமாகக் கொடுத்திடுவோம். அன்பற்ற அன்னோர் தம் குற்றங்களை யுணருமாறு திருத்திடுவோம். வெகுநாள் வரைக்கும் அவர்களை மறவோம். நமது கடையின் உபன்யாஸங்களால் பொதுவாக உலகம் நல்ல நல்ல அனுபவங்களைக் கற்றுக்கொள்ள முடிகிற தென்பது உண்மை. அனுபவம் என்பது என்ன? மனித உலகில் பிறமனிதர்களைப்பற்றியும், அவர்களின் செய்கைகளைப்பற்றியும் நாம் பொதுவாக அந்தந்த சமயங்களில் கண்டு தெளிந்த அறிவே அனுபவமாகும். இந்த அனுபவ அறிவானதுகண்ணீருடனும் இருக்கலாம்; களிப்பு பொங்கியும் இருக்கலாம்; கலக்கத்துடனும் இருக்கலாம்; கனத்த நஷ்டத்துடனும் இருக்கலாம்; ஏமாறிப்போய் அதனுலும் இருக்கலாம்; அன்புவிட்டுப்போயும் இருக்கலாம்; முதிர்ந்த அன்புபெருகி அந்த ஆநந்தானுபவத்திலும் இருக்கலாம். இத்தகைய அநுபவங்களையெல்லாம் அவரவர்கள் வாய்விட்டுக்கூறித் தணிவதற்கே நமது கடையும் ஏற்பட்டிருக்கின்றது. "இந்தச் சாமான்யர்களால் என்ன ஆகும்?" என்று அகங்காரத்துடன் நினைப்பவர்களை— "இந்தச் சாமான்யர்களின் எழுது கோலினுல் எவ்வளவு ஆகும்?" என்பதைப் பளிச்சு பளிச்சென்று அறியும்படியும், புதிய அறிவு பெறும்படியும் "நமது கடை" செய்துவிடுகின்றது. அங்ஙனமாகப் புத்திபெற்ற அன்னோரும் அதன் பின்னர் தம் இழிந்த செயல்களினின்று ஒதுங்கி அடங்கி விடுகிறார்களென்பதும் அநேக தருணங்களிற் கண்டறிந்த அநுபவமாகும்"—என்றார்.

ஃ

ஆமவடைப் பண்டாரம் பேச எழுந்தார். எவருக்கும் பொதுவாய் "நமதுகடை"யானது எப்பொழுது தமது கடையாய் அவரவர்களும் நினைத்துக்கொள்ளும்படி ஏற்பட்டு விட்டதோ அப்பொழுது அந்தக் கடையில் பலவிதமான சரக்குகளும் இருக்கவே செய்யும். பலவிதமான அநுபவங்களை அவரவர்கள் கூடை கூடையாக வாரிக்கொண்டு வந்து கொட்டும்படியும் இருக்கும். இந்த வகையில்—என்னைப்பற்றிப் பேசினர், அவரைப்பற்றி ஏசினர், இவரைப்பற்றி உறுமினர் என்று குற்றம்கூற வருதல் விவேகமாகாது. உலகுக்குப் பொதுவாகச் சொல்லப் பட்ட விஷயத்தில், தன்னுடையது போலவும் அது இருக்குமானுல், தன்னுடைய தவறுதல்களைத் திருத்திக் கொண்டு நற்குணம் பெறவேண்டியதைவிட்டுக் கோபித்தலும், துவேஷித்தலும், விரோதித்தலும், பகை

நன்றாக எழுதியுள்ள நூலைப்பற்றியும், அதனை இயற்றினேரைப்பற்றியும் எவ்வளவு கேவலமாகப் பத்திரிகையில் தாக்கினும், ஜனங்கள் அதைப் பொருட்படுத்தாது அந்த நூலையும் ஆசிரியரையும் கொண்டாடியபடியேதான் இருக்கிறார்கள்.

சாதித்தலும், நட்பிலிருந்து விலகுத லும், கொடுத்தவொன்றைத் திருப்பி அவசரப்படுத்திக் கேட்டலும் தர்ம மாகாது. ஒருவருடைய அனுபவத் தைக் குறிக்கையில் அது மற்றவ ருடைய அனுபவமாகவும் இருக்க லாம். அதற்காக அந்த அநுபவ ஞானத்தை உலகம் அறியாதவாறாக மூடி மறைத்துவைத்து மண்ணாகும் படி செய்து விடுவதென்றால் அது சரியாமா? நமக்குக் கிடைத்த அனு பவத்தின் உயர்வும், அந்த அனுபவச் சரக்கின் விலைமதிப்பும், அந்த அனு பவத்தைத் தாமே சொந்தமாகப்பட் டவர்க்கே தெரியும். ஆகவின், அந்த சிலாக்கியமான அனுபவத்தை உல குக்கு அறிவிக்க முயன்றால் அதைத் தடுப்பது ஒழுங்காகாது. அதை அறி வித்தமைக்காக ஆத்திரப்படுவதும் அழகாகாது. மற்றவர்களுடைய அனு பவங்களைப் படித்து ஹா ஹா! பேஷ் என்று பல்லிளித்து ஆநந்திக்கும் போது, தங்களைப்பற்றியும் சில சம யங்களில் அந்த அனுபவங்கள் சம்மந் தப் படுவதுபோலிருந்தால் அதற்காக முறைத்துப் பார்ப்பது சரியாகாது. அப்படி ஒரு சரக்காக—ஒரு அனுபவ ஞான மூட்டையாக—அது திரண்டு ஓர் உருவாகி எழுந்ததற்கு ஸந்தோ ஷிப்பதுதான் புத்திசாலித்தனமா கும்" என்றார்.

ஃ

மூக்குக் கண்ணாடி சாம்பார் பிரி யர் பின்வருமாறு கூறினார்:—"நமது கண் முன்பு ஒரு சாமான்ய விஷயம் நடக்கிறது; ஒரு சாதாரண சம்பவம் எதிர்ப்படுகின்றது; ஒரு அல்பமான வஸ்துவை நாம் பார்க்கிறோம்; ஒரு நண்பர் நம்மைத் தமது வீட்டிற்கு விருந்துண்ண அழைக்கிறார்; மற் றொரு சமயம் ஸர்க்கஸ், பாட்டுக்கச் சேரி, சினிமா இவைகளுக்கு அழைத்து, மாலையில் வருவதாகச் சொல்லுகிறார். கடைசியில் எதுவும் நடப்பதேயில்லை. எல்லாம் 'டக்'! எல் லாம் தந்திர உபசார மயக்குகளாகவே இருக்கின்றன; பல சமயங்களில் வெட்டிப்பேச்சுகளாகவும் உள்ளன. இவ்வாறெல்லாம் இவர் ஏன் பேச வேண்டுமென்று நினைக்கிறோம். இவற்றிலிருந்தும் ஒரு அனுபவச் சரக்கு கிடைத்து, அதை உலகுக்கு ஒரு புத்தி போதனையான ஞானத் திரட்டாக்கி உதவுவதென்றால், அந்த உத்தமமான அந்த உயரிய சிந்தனைக் குக் கௌரவப்படுத்த வேண்டுமே யன்றி, அதைத் தாழ்த்திப் பேசுவது கூடாது. இவ்விதம் அனுபவச் சரக் காக மாற்றும் அறிவு எங்கோ ஒரு சிலருக்கே தான் உரிய சொத்தாகும். எல்லோருக்குமே அது கைகூடி வாத் தக்கதல்ல. உணர்ச்சியை—அனுபவ த்தை—சொல்லில் உரைத்தல் என் பது ஒரு அபூர்வமான சக்தியாகும். உடலில் கண்ட உணர்ச்சியை, நேரில் தானே அறிவில் தைத்த அனு பவத்தை, உணர்ந்து—அனுபவித்து அப்படியே அதை உலகுக்கு அறிவிப் பது மிகவும் கடினமான வேலை. அனு பவத்திற் கண்ட அறிவு உடனே ஆக்கத்திலும், ஆற்றலிலும் செல்லு கின்றது. இவ்விதமாக நேர்த்தியான முறையின் வழியே அனுபவச் சரக் கைத் தயாரிக்கத் தெரிந்தவர்களை அங்கத்தினராகக் கொண்டுதான் நமது கடை ஏற்பட்டிருக்கிறது. நமது கடை இன்று நேற்று உண் டானதல்ல. 1900-ம் வருஷத்தில் அது ஏற்பட்டது. இன்றைக்கு 32

---

தனக்கு வந்த கணவன் தன்னை ஓயாது அடித்து ஹிம்ஸிப்பவனாயிருந் தால் அப்பெண்ணின் கதி என்ன? இன்னொரு பெண்ணிடம் மனம் வைத்து விட்ட கணவனைத் திருத்த முடிகிறதா? முடியாதாகில்—முடிவுதான் எப்படி?

வருடங்களாகின்றன. நமது கடையின் கிளை ஸ்தாபனங்களாய் எத்துணையோ மேதாவிகளும் அறிஞர்களும் ஏற்படுத்தி நடத்தி வந்திருக்கிறார்கள்; நடத்தியும் வருகிறார்கள். அக்கிரமஞ் செய்தும், போலியன்பு காட்டியும், சுயநலச்சிந்தையாய்த் திரிந்தும், ஏமாற்றியும் பறித்துமுள்ளோர் நமது கடையைக் கண்டு அஞ்சுகிறார்கள். அவர்களால் துன்பத்திற் காளாயினோரும் ஏமாறினோரும் நமது கடையைக் கண்டு ஆநந்தமடைகிறார்கள். ஒன்றைக்கண்டு மகிழ்வதும், வெறுத்துக் கோபிப்பதும் அவரவர்கள் கொண்டுள்ள சொந்த குணங்களைப் பொறுத்து நிகழ்வனவாகும். மகிழ்வதற்கும் வெறுப்பதற்கும் அவரவர்களே காரணமாவார்களன்றி, நமது கடை அதற்குக் காரணமாகாது. இந்த உண்மையை உணர்ந்து "நமது கடை"யைப்பற்றிப் பேதமாக எண்ணாமல் கௌரவித்து, அது புகட்டும் அநுபவஞானப் பாலை மகிழ்வுடனும் அருந்தித் தங்களின் குறைபட்ட கோணலான செயல்களை அவரவர்கள் திருத்திக்கொண்டு குணம் பெற்று உயர்வதே உத்தமமாயிருக்கும்" என்றார். இதுவே நமது கடையில் இன்று நடந்த பிரஸங்கமாகும்.

'பஹதூர்' பொன்வண்டுசெட்டியார்,
கௌரவ காரியதரிசி.

## உன் யோசனையையும் சேர்த்துக்கோள்.

உனக்கு வேண்டிய ஒருவர் சிலரை யழைத்து வந்து அவர்களிடம் வேலைகள் கொடுத்துச் செய்விக்கலாமென்று சிபாரிசு செய்கிறார். நீயும் அதற்கு சம்மதிக்கிறாய். பிறகு வேலைகள் வாங்கிச் செல்ல அவர்கள் வருகிறார்கள். உன்னிடம் சிபாரிசு செய்தவரோ மறுபடியும் வரக்காணோம். இப்புது மனிதர்களின் இருப்பிடமும் தெரியாது. இந்த நிலையில் அவர்களை நம்பி அவர்களின் வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போய் வேலை செய்யும்படி உன் வஸ்துக்களை எப்படி நம்பிக்கொடுப்பது? இந்த சமயத்தில் உன் யோசனையையும் சேர்த்துக்கொண்டு ஆலோசி. அவர்களின் இருப்பிடமும் நாணயமும் உனக்குத் தெரியாதபோது நீ எதையும் வேலை செய்வதற்குக் கொடுக்காதிருப்பதே மேல். அதுவே பின்னுக்கு வருந்தாத—கொடுத்து ஏமாறாத வழி.

கருதிவந்த காரியம் தடைபடின், அல்லது தாமதமுண்டானல் மனது குழப்பமாகிறது உடனே திரும்பிவிட நினைப்பினும் மனது அதற்கு ஒப்புவதில்லை.

ஆறணா விலையில் ஒரு சாமானை வாங்கிவரும்படி எழுதினால், அது எட்டணா விலைசொன்னதால் வாங்கிவரவில்லை என்கிறார்கள். கூடஇரண்டணா சேர்த்து வாங்கிவந்துவிட்டாலென்ன? எல்லாவற்றிற்கும் மனது காரணம்.

## காதல்!

காதல் என்று பேசுங்கால், பெண்ணின் உடலமைப்பைப்பற்றி நினைந்து நினைந்து உருகி—அதுவும் சுபத்திரையை மணக்கத் தவக்கோலம் பூண்ட அருச்சுனனைப்போல—தவங் கிடக்கின்றார்களேயன்றி, உள்ளபடியே பெண்ணின் உள்ளத்தை அறிந்துகொள்ள ஆவல் படைத்து நிற்பதில்லை.***காதலை விலைகொடுத்து வாங்கமுடியாது. காதலை, உள்ளத்தில் துடிக்கும் உயிரைக்கொடுத்துப் பெறவேண்டும்.***காதலர்களின் உள்ளம் கனிந்த கனல்—உயர்ந்த குன்றம்—மலர்ச்சோலை—குளிர் பூந்தென்றல்—ஆண்டவன் கோயில் ஆகும். காதலர்களின் உள்ளத்தில் கொழுந்துவிட்டுக் காதல் எழ, புறச்சாதனங்கள் தேவையில்லை. ***காதல் கவிதைத்தன்மை கொண்டது. காதல் கடவுளின் ஆணையான அறத்துக்குள் அடங்கியது. காதல் அறத்தைத் தழுவியது; அந்த அறத்தைக் காப்பாற்றிச் செழிக்கச் செய்யத் தூண்டுதலாய் நிற்பது காதல். காதலானது மனிதர்களை அவர்களது விலங்குத் தன்மையினின்றும் விடுவித்து, மனிதர்களாக்கும் பேராற்றல் படைத்தது.

("காதற் கடிதங்கள்") வ. ரா.

## நீயே நேரில் போ.

ஒரு சங்கதிக்காக ஒருவரை உடன் அழைத்துக்கொண்டு ஓரிடத்திற்குப் போகவேண்டியிருக்கும்பொழுது உனக்குத் துணையாக வருகிறவர் நாளை காலை 10-மணிக்கு வருவதாகக் கூறுகிறார். அவர் வருவாரோவென்ற சந்தேகத்துடன் அந்தப் 10-மணிக்கு நீயே அவர் வீட்டுக்கு வருவதாகப் பேசி முடிக்கிறாய். மறுநாட் காலையில் 10-மணிக்கு நீ அவரிடம்போக ஏதோ அசந்தர்ப்பமாய் ஒரு கடிதத்துடன் அவரிடம் ஆள் அனுப்பி அந்த ஆளுடன் வரும்படி எழுதுகிறாய். அவரோ அக்கடிதத்திற்குப் பதிலாகத் தான் 3-மணிக்கு வருவதாக எழுதியனுப்பி விடுகிறார். நீ முதலிலேயே கடிதம் தந்தனுப்பாமல் நீயாகவே நேரில் அவரிடம் போயிருந்தால் அவர் மறுத்துச் சொல்லியிருக்க முடியாது. உன்னுடன்கூடவே 10-மணிக்கே வந்திருப்பார்; வேலைகளும் ஆகியிருக்கும். ஆதலின், எதற்கும் நீயே போவது தான் சரி. நீ போய் ஆகிறகாரியம் நீ அனுப்புகிற மனிதனால் ஆகாது. நம்முடன் வெட்டி வார்த்தைகள் பேசுவதற்கு எந்த நேரமும் வலிய வந்து பேசுவார்கள். ஆனால், அவர்களால் ஆகவேண்டிய ஒரு சங்கதிக்கு அவர்களைத் தேடும்போதோ அப்பப்பா! அவர்களைக் கண்டுபிடிப்பது மகா பிரயாசை.

---

ஒரு பத்திரிகையின் ஆசிரியர் காலஞ்சென்றால், அவரோடு அந்தப் பத்திரிகையின் அமைப்பும் நடையும் யாவும் போய்விடுகிறது. புதிதாக வரும் பத்திராசிரியர் புதுமுறையாகப் பத்திரிகையை அமைக்க முடிகிறதேயன்றி முன்னவர் அமைத்த வழியில் செல்ல முடிகிறதில்லை. ஒருவரது எழுதுகோலின் போக்கு, தொனி, நுட்பம் இன்னொருவருக்குப் பொருந்துவதில்லை.

---

கடன் ஏற ஏற டம்பாசாரித்தனம் அதிகமாகும்; உயிர்போகும் சமயம் நெருங்க நெருங்க மனிதனுக்கு சேஷ்டைகள் அதிகரிக்கும். இரண்டும் ஆபத்தின் அடையாளம்.




# இராஜசந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.



### அத்தியாயம்— 10.

### சென்னையில் கமலவல்லி.

(120-ம் பக்கத் தொடர்ச்சி.)

### X.

பொன்னுசாமி:—அதற் கென்ன செய்வது? இந்த வயதில்தானே சகல ஆட்டமும் ஆடி முடிக்கவேண்டும். பணம் நாளைக்குக் கிடைக்கும், இந்த யௌவன வயது நாளைக்குக் கிடைக்குமா? தக்க வயது இருக்கும் பொழுதே பார்க்கவேண்டிய சுகங்களை யெல்லாம் அனுபவித்து ஆநந்திக்கவேண்டாமா?

கமலா:—உன்னுடன் ஒரு குல ஸ்திரீ பேசுவது ஒழுங்கல்ல. உன் ஒவ்வொரு பேச்சுகளிலும் காம விகாரமே தொனிக்கின்றது. சரி, நீ இப்போது புறப்பட்டுச் சென்றுவிடு. இனி இங்கு வராதே.

பொன்னுசாமி:-நான் உன்னுடன் இவ்வீட்டிலேயே இருக்கலாமென்று எண்ணி யல்லவோ ஆசைப்பட்டு வந்தேன்.

கமலா பதில் ஏதும் சொல்லாமல் எழுந்து உள்ளுக்குச் சென்றாள். அவள் கட்டளைப்படி ஜானகி வெளியில் வந்து பொன்னுசாமியைப் போய் வரும்படி கூறினாள். அவனும் திகைத்து வாடி மௌனமாய்ப் புறப்பட்டுச் சென்றான்.

ஃ

காமுக ஆடவர்க்கு ரோஷமில்லை, மானமில்லை, வெட்கமில்லை. தம்மை வெறுத்து ஒதுக்கிய இடத்திற்கே மறுபடியும் சென்று மதிப்பிழந்து போவது வழக்கம். அவ்விதமே பொன்னுசாமியும் கமலாவைக் காண அடிக்கடி சென்று வந்தான். இவன் வரும்பொழுதெல்லாம் கமலா தனித்திராமல் ஜானகியுடனும் தன் குழந்தைகளோடும் பக்கத்து வீட்டினரான ஒரு வயோதிகரோடுமே இருந்து கொண்டு பேசத் தொடங்கியபடியால், பொன்னுசாமியும் அதிக வார்த்தைகளை வளர்க்க முடியாமல் சீக்கிரமே விடை பெற்றுத் திரும்பி விடுவதாயிருந்தான். இதன் இடையில் ஒரு நாள் கமலா பொன்னுசாமியிடம் பழைய பிரீதியோடும் தன் கணவர் நாளை காலை வண்டியில் வருவதாகக் கூறினாள். பொன்னுசாமிக்கு அது

ஒரு நல்ல ஆயுதமாயிற்று. மறுதினம் பொன்னுசாமி எழும்பூர் ஸ்டேஷனுக்குச் சென்று கண்ணப்பனை யழைத்துக்கொண்டு வந்தான். வழியில்தான் கமலவல்லிக்கு ஒரு துணையாக இருந்துவருவதாகவும், அவளுக்கு வேண்டிய உதவிகளெல்லாம் செய்து வருவதாகவும், அவள் தேகம் குணமடைந்து விட்டதாகவும் புகன்றான். கண்ணப்பன் இதை நம்பியவனாய், அவன்செய்த உதவிகளுக்காக வந்தனமளித்ததன்றி, கமலாவின் பந்துவாகையால், அவன் இவ்வூரிலிருக்கும் வரையில் அவளைக் கவனித்து வரும்படியாகவும் கேட்டுக்கொண்டான். பொன்னுசாமியும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தான். காமுக ஆடவர் எப்படிப் பிறரை மயக்குகிறார்களென்பதை இங்கு கவனித்தீர்களா? கமலவல்லி தன்னை வெறுத்து வீட்டின் பக்கம் வரவேண்டாமென்று ஒதுக்கிவிட, பொன்னுசாமியோ கண்ணப்பனுக்கு மிக வேண்டியவனாக நடந்துகொண்டு கமலாவின் வீட்டிற்குள் தாராளமாய் வர இடம் தேடிக்கொண்டான். ஒரே வீட்டில் ஒருவரை விரோதித்து மற்றவருடன் மிக்க வேண்டியவர்களாக நடந்துகொள்வதும், அந்த வழியில் வீட்டுக்குள் கால்வைத்து நுழைய வழிதேடிக்கொள்வதும் மகா சண்டாளத்தனமான வஞ்சனை மிகுந்த மித்திரபேத காரியங்களாகும்.

ஃ

கண்ணப்பன் பொன்னுசாமியுடன் வீடு சேர்ந்து கமலாவையும் குழந்தையையும் கண்டு மகிழ்ந்தான். கண்ணப்பன் வருவது பொன்னுசாமிக்கு எப்படித் தெரிந்ததென்று யோசித்து, தானே தவறிச் சொல்லிவிட்டதை யறிந்து, ஏன் சொன்னேனென்று கமலா தன்னைத்தானே நொந்துகொண்டாள். அன்று பொன்னுசாமிக்கு அவ்விடத்திலேயே கண்ணப்பனுடன் புசிப்பும் நடந்தது. ஒரு வீட்டில் ஒரு தடவை புசித்துவிட்டால் அந்த வீடு அதிக சொந்தமாகி விடுவது சாதாரணம். ஆகவே, பொன்னுசாமி இப்பொழுது சமையற்கட்டிற்குள்ளும் அடிக்கடிபோய் வருவதானான். அங்கிருந்த கமலா இவனைக் கண்டதும் மறுத்துச் சொல்ல முடியாமல் தத்தளித்தாள்.

ஃ

இரண்டு தினங்கட்குப் பிறகு கண்ணப்பன் பிரயாணமானான். போகும் பொழுது பொன்னுசாமியை நோக்கி, "நீ மிகவும் ஜாக்கிரதையாகக் கமலவல்லியைக் கவனித்து வா; நீ அவளுடைய பந்துவாகையால் உன்னைவிட இவ்வூரில் அவளுக்கு உதவி செய்பவர்கள் யாருமில்லை" என்று கூறிச்சென்றான்.

ஃ

அவன் போய்விட்டபின், பொன்னுசாமியை நோக்கி,

கமலா:—நீ எப்போது பௌரிங்பேட்டைக்குப் போகிறாய்? என்றாள்.

பொன்னுசாமி:—நானா? என் தந்தை யிறந்த பிறகுதான் போவேன். இப்பொழுது சென்றால் கடன்காரர்கள் என்னைச் சிறைக்குக் கொண்டு போய்விடுவார்கள்.

கமலா:—நீ என்றைக்காவது சிறைக்குப் போகவேண்டியவனே.

---

வேசி மானம் போக்கும் தாய்—அன்பிலா மனைவி—பகைக்கும் உறவினர்—ஓயா விருந்து—உதவா நேயர்—நீங்கா வறுமை—கொடிய கடன்—தீராத நோய்—இவை யாவும் கூடினால் ஒருவனின் உள்ள நிலை எவ்வாறாகும்?

உன் துஷ்டத்தனங்களைப் பார்க்கையில் சிறைச்சாலையில்தான் உனக்கு மரணம் ஏற்படுமென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன். நான் மனக்கொதிப்புடனும் கூறும் வாக்கு வீணுகாது. உன்னை இங்கு சேர்க்காமலிருப்பதே நலமானதால் நாளை முதற்கொண்டு இங்கு வராதே. இந்த வாசலை எட்டியும் பாராதே. ஒரு ஸ்திரீ நெருப்புமயமாய் இருக்கையில் அவளை எவனும் நெருங்கமுடியாது.

ஃ

பொன்னுசாமியும் பிறகு மௌனமாகப் புறப்பட்டுச் சென்றுன்.

ஃ

இவ்விதம் ஒருவாரம் சென்றது. விடாமழையாக நான்கு தினங்கள் வரை பெய்ததால் குளிர்காற்று அதிகம் வீசியது. அதனுல் கமலாவுக்குக் குளிர் ஜ்வரம் வந்துவிட்டது. ஜ்வரம் என்பது சென்னையின் சொந்த சொத்து. அன்று சனிக்கிழமையாதலின் ஜானகி குழந்தைகளோடும் ஸ்வாமி தரிசனத்திற்குச் சென்றிருந்தாள். கமலா படுத்துக் கம்பளியைப் போர்த்துக்கொண்டிருந்தாள். அந்த சமயத்தில் பொன்னுசாமி அங்குவந்து வீட்டில் எவருமில்லையென்று தெரிந்துகொண்டு, "ஐயோ கமலா! உனக்கு குளிர் ஜுரம் வந்துவிட்டதே; தூக்கித்தூக்கிப் போடுகிறதே; உதவிக்கு யாருமில்லையே" என்று கூறி அவளுடைய தேகத்தை நன்ருக அழுத்திக் கொண்டிருந்தான். கமலா இதைச் சகியாமல் தூரப்போவென்று சொல்லியும் அவன் அதைக் கேளாதவன் போல், இன்னும் அதிகமாக அவன் மீது சாய்ந்துகொண்டு அவளுடைய கன்னத்தையெல்லாம் தடவிக்கொடுப்பதானுன். கமலா அவன் செய்யும் துஷ்டத்தனத்தை யறிந்து, அதைத் தடுக்கவும் எழுந்திருக்கவும் சக்தியின்றி மனது புண்ணுகிக் கம்பளியுடைய நெடுக முக்காடிட்டுத் தன் தேகமுழுமையும் மூடிக்கொண்டாள். பொன்னுசாமி அவளருகிலேயே உட்கார்ந்து வருந்தப்படுபவன்போல் அபிநயித்து அவளை அமுக்கிக்கொண்டிருந்தான். நாசமாய்ப்போன ஆடவர்களின் தந்திரங்களைப் பார்த்தீர்களா? சில ஆடவர்கட்குப் பெண்களை மயக்கும் சக்தி இயற்கையிலேயே இருக்கிறதுபோல் தெரிகிறது. இவர்கள் வெகு சுந்தரிகளை ரகசியத்தில் கெடுத்துவிடுகின்றனர்.

ஃ

கோயிலுக்குச் சென்றிருந்த ஜானகி வெகு சீக்கிரத்திலேயே வீடு வந்து சேர்ந்தாள். அங்கு பொன்னுசாமியைக் கண்டதும், எவருமில்லாத போது நீ ஏன் இங்கு வந்தாயென்று கோபத்துடன் கேட்டாள்.

**பொன்னுசாமி:**—நீ இந்த வீட்டுக்கு எஜமானியா? ஒரு வேலைக்காரிக்கு எவ்வளவு மரியாதையோ அவ்வளவுடன் நில்.

**ஜானகி:**—வேலைக்காரியே வீட்டில் பாத்தியப்பட்டவள். வீட்டின் தலைவி படுத்துக்கொண்ட இந்த வேளையில் நான்தான் இவ்வீட்டிற்கு எஜமானி. நீ மரியாதையாகச் சென்றுவிடு, இல்லாவிடில் உன்னை அவமானப்படுத்த அடுத்த வீட்டுக்காரரைக் கூப்பிடுவேன்.

ஃ

---

ஒரு நாட்டில் சேர்ந்து வசிப்பவர்கள் தங்களுக்குள் ஜாதி—மாச்சரியங்களை விருத்தி செய்துவந்தால், அவர்களில் ஒருவகுப்பினரும் செழித்தோங்குதல் சாத்தியமல்ல. இது பழய இந்தியா—இன்றைய இந்தியா இரண்டுக்கும் குறிப்பிடக்கூடியது.

இதற்குள் பக்கத்துவீட்டு வயோதிகரும் வரவே, பொன்னுசாமி மௌனமாகச் சென்றுவிட்டான். கமலாவின் ஜ்வரமும் இரண்டு தினங்களில் குணமடைந்தது. பொன்னுசாமி கமலாவுக்கு ஜ்வரம் வந்ததாகவும், தான் பக்கத்திலிருந்து எவ்வளவோ உதவிகள் செய்ததாயும், மற்றொரு முறை சென்னைவந்து போவது நலமென்றும் வெகு பிரியமுடையவன் போல் கண்ணப்பனுக்குக் கடிதம் எழுதியனுப்பினுன். ஆ! இந்தக் காமுக நாய்கள் என்னென்ன தந்திரங்களெல்லாம் கற்றுவைத்திருக்கிறார்களப்பா! இவன் கடிதத்திற்குப் பதிலாகக் கண்ணப்பனும் தான்வரும் தினத்தைக் குறிப்பிட்டுக் கடிதம் எழுதினுன். அந்தச் செய்தியைக் கமலாவுக்குத் தெரிவிக்க வந்ததுபோலச் சாக்கிட்டுக்கொண்டு கமலாவின் வீட்டிற்கு வந்து கண்ணப்பனின் கடிதத்தைக் காண்பித்தான்.

கமலா:—எனக்கு ஜ்வரம் என்று அவருக்கு ஏன் எழுதினுய்? என்னிடம் நெருங்க முடியவில்லையென்று அவரிடம் நெருங்க முயல்கிறுயா? ஒரு வீட்டில் பெண்கள் வெறுத்தால் புருஷர்களிடம் உறவாடுகிறது. புருஷர்கள் வெறுத்தால் பெண்களிடம் உறவாடுகிறது. உன் தந்திர வித்தைகளெல்லாம் இங்கு பலியாது. கணவனையும் மனைவியையும் பிரித்து வைத்து உறவாட நான் இடம் தரேன்.

பொன்னுசாமி:—நாம் இருவரும் சிறு பிராயத்தில் எவ்வளவோ வேடிக்கையாக விளையாடிக்கொண்டிருந்தோமே; உனக்கு அவைகளெல்லாம் ஞாபகமிருக்கிறதா? நீ என்னை எவனே அன்னியனென்று வித்தியாசமாய் நினைக்கிறுயே?

கமலா:—சிறு பிராயத்தில் விளையாடினதுபோல் இப்போதும் விளையாடலாமென்று எண்ணினுயா?

பொன்னுசாமி:—இப்போது விளையாடினுல் என்னமோசம்? என் தாய் இறவாமலிருந்தால் உன்னை எனக்கு மணம் செய்துவிட்டிருப்பார்கள்.

கமலா:—இப்போது நான் வேறொருவருடைய மனைவியாய் விட்டபிறகு என்னை நீ தீண்டல் நியாயமா? என் ஜ்வரத்தின்போது என்னைத் தீண்டி மேலே சாய்ந்தது எவ்வளவு தகாத செய்கை?

பொன்னுசாமி:—நீ வேறொருவனுடைய மனைவியாய் விட்டபோதிலும் என் பாத்தியம் எங்கே போய் விடும்?......

கமலா:—பாழும் பாத்தியமிருந்தால் தூரநின்று தொடாமல் பேசு.

பொன்னுசாமி:—உன்னை விட்டிருக்க எனக்குப் பிரியமில்லை. சதா உன்னுடனேயே சுற்றிக்கொண்டிருக்கவே என் மனம் போகிறது. நான் என்ன செய்வேன். என் முழுமனம் பறித்த கோகிலம் நீ.

கமலா:—இவ்விதம் சொல்லி எவ்வளவு பெண்களைக் கெடுத்தாயோ? ஓச்சீ! நீ முழுமூடன். உன்னுடன் பேசுவது நியாயமல்ல.

பொன்னுசாமி:—நீ சொல்வது வாஸ்தவமே. நான் முழுமூடனுனபடியால் தான் என் வமிஸத்திற்

---

"மிக்க குழம்பிய மனத்துடனும், சந்தோஷமற்றும், அன்பில்லாதவர்களின் மத்தியிலுமாக என்காலம் கழிகின்றது. எனினும், சிறுமிகள் மாமியாரும் கொடிய கணவனுலும் படும் துன்பங்களை நோக்கில், அதற்குமுன் என் துன்பம் ஓர் பெரிதாகமாட்டாதென்று சாந்தி கொள்கின்றேன்."

பிறந்த உன்னை மணந்துகொள்ளாமல் கண்டபடி அலைந்து ஏமாறிப்போனேன். இனிமேல் மாத்திரம் என்ன? நீ என்மீது மனமிரங்கினால் எனக்கென்ன குறை?

கமலா:-மரியாதை கெட்டவனே! என்னிடமா உன் சாமர்த்தியத்தைக் காட்டுகிறாய்? என் கணவர் வரட்டும்; உன்னைப்பற்றிய எல்லா சங்கதிகளையும் சொல்லிவிடுகிறேன். அதன் பிறகு குலஸ்திரீகளைக் கெடுக்க முயலுகிற துரோகியாகிய உன் கதி என்னாகிறதென்று பார்.

பொன்னுசாமி:—கமலா என்னைக் காட்டிக் கொடுத்துவிடாதே. ஏதோ புத்தி சுவாதீனமின்றிப் பேசினேன். இனி உன்னைத் தொடமாட்டேன். என்னை மன்னித்துவிடு. இதோ நான் போய்விடுகிறேன்.

ஃ

என்று காலில் விழுந்து கெஞ்சி வேண்டினான். கமலாவும் கோபத்துடன் உட் சென்றுவிட்டாள். பொன்னுசாமியும் அவ்விடத்தை விட்டு நீங்கினான். அவன் சென்ற பின் கமலா இனி இவ்வூரில் இருக்கலாகாதெனத் தீர்மானித்துக்கொண்டு தன் மூட்டைகளையெல்லாம் கட்டிச் சித்தப்படுத்திப் பிரயாணத்திற்குத் தயாராகும்படி ஜானகிக்குத் தெரிவித்து, அவ்வீட்டுக்காரருக்கும் அந்த மாதத்து வாடகையைக் கொடுத்துவிட்டுத் தான் நான்கு தினத்தில் ஊருக்குப் பிரயாணப்படப் போவதாகக் கூறிவிட்டாள். படித்த பெண்மணியின் ஏற்பாடுகள் ஒரு நிமிஷத்திலாகிவிடுவது சாதாரணமே.

ஃ

இரண்டு தினங்கட்குப் பிறகு கண்ணப்பன் வர, பொன்னுசாமி ரயிலுக்குச்சென்று அவனை அழைத்து வந்து வீட்டில் விட்டுச் சற்றுநேரமிருந்து போய்விட்டான். வீட்டுப் பெண்கள் அதிர்ப்திபட்டுவிட்ட பிறகு எவ்வளவு நெருங்கியவர்களும் அந்த வீட்டில் ஒரு நிமிஷங்கூடத் தங்கியிருக்க முடியாதென்பது பெரியதோர் அனுபவம். அதுபோலவே, பொன்னுசாமியும் உடனே புறப்பட்டுப் போய்விட்டான். கமலா கண்ணப்பனை நோக்கி, "நான் இனி ஒருக்காலும் இங்கிருக்க மாட்டேன்; நீங்கள் என்னை யழைத்துக்கொண்டு போய்விடுங்கள்" என்றாள்.

கண்ணப்பன்:—(அவளைத் தழுவி முத்தமிட்டுக்கொண்டு) கண்மணி! உன் தேகம் குணமடையும் வரையில் இன்னும் சில நாள் இவ்வூரிலேயே இருந்தால் நலம்.

கமலா:—நீங்களும் என்னுடன் இருப்பதாயிருந்தால் இருக்கிறேன். தங்களை விட்டுப் பிரிந்து தனித்திருக்க எனக்கு அச்சமாயிருக்கிறது.

கண்ணப்பன்:—உன் நெருங்கிய பந்துவான பொன்னுசாமி இங்கு இருக்கும்போது உனக்கு என்னபயம்? நான் முக்கியமாக இரண்டு கேசுகளுக்காக வாதிக்கவேண்டும். என்னுடைய வக்கீல் தொழிலின் ஓயாத தொல்லை உனக்குத் தெரியாதா?

கமலா:—அந்த கேசுகளை வேறே வக்கீலிடம் கொடுத்து விடுங்கள். அதனால் கிடைக்கிறபணம் வேண்டாமே.

கண்ணப்பன்:—அப்படிச் செய்வது ஓர் வக்கீலுக்கு அழகல்ல. கட்சிக்

---

சில தாய்மார் தங்கள் வீட்டுக்கு வருவோரிடமெல்லாம் தங்கள் குமாரனைப்பற்றிப் புகார் பேசுகிறார்கள். என்னதான் கேவலப்படுத்தினாலும் ஊராருக்கு உண்மை தெரியாமலில்லை.

காரர்களுக்கு அதனால் அதிக நஷ்டமும் என்மீது வருத்தமுமுண்டாகும். நானே அவர்களின் வழக்கை வாதித்தால்தான் அவர்களுக்குத் திருப்தியுண்டாகும். நீ என்னை முழுதும் நம்பியிருப்பதுபோல், அவர்களும் என்னை முற்றிலும் நம்பியிருக்கிறார்கள்.

கமலா :—அப்படியானால் இரண்டு தினத்தில் எல்லோருமாகப் பிரயாணப்பட்டு விடுவோம். வீட்டுக்காரருக்கும் இதை முன்பே தெரிவித்து வாடகையும் கொடுத்துத் தீர்த்து விட்டேன்.

கண்ணப்பன் :—இங்கு உனக்குத் துணையாகப் பொன்னுசாமி இருக்கையில் நீ ஏன் இப்படி வீணே கவலைப் படுகிறாய். அவன் வெகு உத்தமனும் சகாயஸ்தனுமாயிற்றே?

கமலா :—எவர்கள் உள்ளுக்கு மிகவும் கெட்டவர்களோ அவர்களைத்தான் வீட்டுத்தலைவர்கள் வெகு உத்தமர்களாக நம்பித் தங்கள் மனைவியர்க்கும் துணையாக வைத்து ஏமாறிப் போகிறார்கள். பொன்னுசாமியின் துர்நடவடிக்கைகளுக்கு அவனை ஒரு யோக்கிய மனிதனாய் இங்கு சேர்ப்பது குடும்ப ஒழுங்காக மாட்டாது.

கண்ணப்பன் :—பொன்னுசாமியை நீ முன்பு சிலாகித்திருந்தாயே?

ஃ

பொன்னுசாமி நடந்துகொண்ட விதங்களைக் கண்ணப்பனுக்குத் தெரிவித்து விடலாமாவென்று கமலா யோசித்தாள். கொலை பழி பாவங்களுக்கெல்லாம் காரணம் ஸ்திரீகளால் உண்டாகும் விரோத விபரீதங்களேயென்பதையுணர்ந்த கமலா பொன்னுசாமியைக் காட்டிக் கொடுத்து விடுவதால் பெருங் கலகத்திற்கு இடமாகுமென்று நினைத்து வேறு விதமாகப் பேச்சைத் துவக்கினாள்.

கமலா :—கிருஷ்ணவேணி எவ்வளவு சொந்தமுடையவளாயிருந்தாலும் அவள் தங்களுடன் பேசுவதைக்காண என்மனம் சகிக்கவில்லை. அவ்விதமே பொன்னுசாமியோ வெள்ளிசாமியோ எந்த இரத்தின சாமியாயிருந்தாலும், எவ்வளவு சொந்தமுடையவனாயிருந்தாலும் ஒரு ஆண்மகன் என்னுடன் பேசுவதற்கு நீங்கள் இடம் தரக்கூடாதென்பது என் பிரார்த்தனையாகும். எப்படியும் பொன்னுசாமி அன்னிய ஆடவனே. உறவினன் என்ற மாத்திரத்திலேயே ஒருவனை முற்றிலும் யோக்கியனென்று நம்பிவிட வொண்ணாது. உறவினராக இருந்து வீட்டிற்குள் பருவபக்குவமடைந்துள்ள பெண்களைக் கெடுத்துப் பாழாக்கி விட்ட சண்டாளர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். ஆடவர்களின் நல்லொழுக்கத்தில் எனக்கு நம்பிக்கை கிடையாது. பொன்னுசாமியை எனக்குத் துணை வைப்பதிலும், என் கண்மணியான தமயன் இராஜ சந்திரனைக்கொண்டுவந்து துணை வையுங்கள். இளைத்த எனது சரீரம் இருமடங்காகப் புஷ்டித்து விடுவதை நீங்களே நேரில் பார்க்கலாம். அல்லது என் சிறிய தந்தை ஸ்ரீநிவாச முதலியாரையாவது, என் அத்தையின் கணவரையாவது என் துணைக்கு

---

நமக்கு வேண்டிய நண்பர்களாயிருந்தபோதிலும் சில சமயங்களில் அபிப்பிராய பேதத்தால் நமது எதிரிகளின் பக்கமும் சேர்ந்துகொண்டு அவர்களுக்காக நம்மிடம் பரிந்துபேசி வாதாடலாம். ஆகவே, நண்பர்களைவிட நமது சொந்த மூளையை நம்புவதே நலம்.

வையுங்கள். நான் சந்தோஷத்துடன் இன்னும் இரண்டுமாசங்கள் இருந்து விட்டுப் புறப்படுகிறேன். அதை விட்டு ஸ்திரீலோலனும், காமுகனும், துன்மார்க்கப் பிரவர்த்தகனும், பிதாவின் மனதிற்கு விரோதமாக நடப்பவனுமான பொன்னுசாமியை எனக்குத் துணையாக வைப்பது ஸம்சாரநீதிக்கு ஒழுங்காகமாட்டாது. ஆதலின், தங்களுடனேயே புறப்பட்டுவிடத் தீர்மானித்து விட்டேன். என் வார்த்தையை மறுத்துச் சொல்ல வேண்டாம்.

ஃ

இதைக் கேட்டதும் கண்ணப்பன் மௌனமானான். கமலாவின் வார்த்தைகளுக்கு சிலாகித்து அவளைத் தழுவிக்கொண்டான். நீ வக்கீலின் 'பெண்டாட்டி' யானதால் ஒரு வக்கீல்போல் உன் கக்ஷியை எடுத்து வெகு திறமையாக வாதிக்கிறாய் என்றான். பிறகு கண்ணப்பன் இரண்டு தினங்கள் வரையில் சென்னையிலேயே இருந்தான். பொன்னுசாமி வந்தால் புறப்படுகிற தினத்தை அவனுக்குத் தெரிவிக்க வேண்டாமென்றும், இன்னும் பிரயாண நாள் நிச்சயப்படவில்லையென்று கூறும்படியும் கமலா கண்ணப்பனுக்குத் தெரிவித்திருந்தாள். அன்று பகலில் பொன்னுசாமியும் வந்து, எப்பொழுது பிரயாணப்படுகிறீர்களென்று கேட்டுவிட்டு, கமலவல்லி, இன்னும் ஒரு மாதம் சென்னையில் இருந்தால் தான் உடம்பு தேறும் என்று கூறினான்.

ஃ

கமலா :-ஆம், நான் இங்கு இருப்பதுடன்கூட, எனக்குக் குளிர் ஜ்வரமும் வரவேண்டுமென்று கடவுளை வேண்டிக்கொள். அது உனக்கு அதிக ஸந்தோஷ காலமல்லவா ?

கண்ணப்பன் :—என்ன கமலா ! உனக்குக் குளிர் ஜ்வரம் வந்தால் பொன்னுசாமிக்கு அதனால் என்ன ஸந்தோஷம் ?

கமலா :—அப்பொழுது பொன்னுசாமி எனக்கு உதவி செய்ய வரலாமல்லவா ? இவர் உதவியும் எனக்குத் தேவையில்லை. எந்த ஜ்வரமும் எனக்கு வரவேண்டாம்.

பொன்னுசாமி :—கமலாவுக்கு விநோதமாகப் பேசுவதே வழக்கம். தாங்கள் எப்பொழுது ஊருக்குப் புறப்படுகிறீர்கள் ?

கண்ணப்பன் :—இன்னும் ஒரு வாரம் செல்லுமென்று நினைக்கிறேன். எதுவும் நிச்சயமாய்ச்சொல்வதற்கில்லை. இந்த நிமிஷமே புறப்பட்டாலும் புறப்படலாம். வக்கீலின் உடம்பு ஊராருக்குச் சொந்தமானது. எந்த நிமிஷத்தில் எந்தக் கக்ஷிக்காரனிடமிருந்து என்ன தந்தி வருமோ ?

பொன்னுசாமி :—தாங்கள் ஊருக்குப் போகும்போது "பச்சடி விலாஸ்" ஹோட்டலுக்கு ஒரு ஆள் அனுப்பினால் நான் உடனே வந்து தங்களை ரயிலேற்றிவிடுகிறேன்.

கணப்பன் :—என் பெட்டியை நானே தூக்குவதுதான் எனக்கு வழக்கம். பிறருக்குக் கஷ்டம் தருவது என் ஸ்வபாவமல்ல. ஒரு ரயில்வே கூலிக்காரனுக்கு ஒரு அணா கொடுத்துவிட்டால் அவன் எல்லா உதவியும் செய்துவிடுவான். தங்களுக்கு என்னால் எந்த சிரமமும் ஏற்பட

---

முதலில் வேலைக்கு வந்தவன் நம்மிடம் அதிகமாய் வணங்கிக் கும்பிடு போடுகிறான். இவனைவிட ஏற்கெனவே நம்மிடம் வேலைக்கு இருந்துகொண்டு நம்முடன் சண்டையிடுவோனை அதிகமாய் நம்பலாம்.

வேண்டாம். ரயிலுக்கும் தாங்கள் வரவேண்டாம்.

ஃ

சிங்கள் மனைவி பிறரிடம் பிரீதி பாராட்டுகிறவரையில் அவர்களிடம் வெகு அன்பாக நடந்து கௌரவிப்பதும், தங்கள் மனைவி ஒதுங்கிக்கொள்ளும்போது தாங்களும் அன்னியர் போல் விலகி அலக்ஷியப்பதும் சில வீட்டுப் புருஷர்களின் வழக்கம். வக்கீலான கண்ணப்பன் தன் மனைவி பொன்னுசாமியைக் குறித்துத் தாழ்வான அபிப்பிராயம் கொள்ளவே, அவன்பொருட்டாகத்தான் பொன்னுசாமியை மதித்திருந்தானாகையால், இப்போது அதினின்றும் விலகிக் கொண்டு அன்னிய மனிதப்போக்கில் பேசுவதானான்.

ஃ

பொன்னுசாமியும் கண்ணப்பனின் புதுப் போக்கைக் கண்டு வியப்புற்றுக் கமலா தன்னைப்பற்றி ஏதேனும் தெரிவித்திருக்கக்கூடுமோ வென்று சந்தேகித்தவனாய் சீக்கிரத்திலேயே விடைபெற்றுச் சென்றான். நான்கு தினங்கட்குப் பிறகு பொன்னுசாமி மறுபடியும் கமலாவின் நினைவோடு அவள் வீட்டை நாடி நடந்தான். சில புருஷர்களுக்கு ஒரு பெண்ணைக் கெடுப்பதற்குமுன் ஸதா அவள் ஞாபகமே மேலிட்டிருப்பதும், தங்களின் தீய நினைவுகளை நிறைவேற்றுவதற்கான யுக்திகள் செய்தபடியே இருப்பதும் வழக்கம். பொன்னுசாமி கமலாவின் வீட்டிற்குள் தாராளமாய் மடமடவென்று நுழைந்தான். வீட்டுத் திண்ணையிலிருந்த பெண் எவனோ திருடன் உட்சென்றானென்று பயந்து தெருக்கதவை இழுத்து மூடி வெளியில் தாள்ப்பாளிட்டுவிட்டுக் கத்தினாள். தெருவில் கனத்த கூட்டம் கூடிற்று. உள்ளுக்குச் சென்ற பொன்னுசாமி அங்கு எவரையும் காணாது திரும்பிக் கதவைத் தட்டினான். ஜனங்கள் கதவைத் திறந்து நையப் புடைத்தனர். பொன்னுசாமி அடிகளைப் பெற்றுக் கொண்டு தான் கண்ணப்பனைக் காண வந்ததாயும், அவர்கள் இவ்வீட்டில் இருந்தார்களென்றும் கூறினான். அதன்பின்பு ஜனங்கள் அவனைத்திருடனல்லவென்று விட்டு விட்டு, முன்பு குடியிருந்தவர்கள் தங்கள் ஊருக்குச் சென்றுவிட்டதாயும், இப்போது அவ்வீட்டில் புதிய குடிவந்து இரண்டு தினங்களாகிறதென்றும் தெரிவித்தனர். பொன்னுசாமி திகைத்தவனாய்ப் பக்கத்து வீட்டில் விசாரித்ததில் கமலாவும் கண்ணப்பனும் தான் பார்த்துச் சென்ற தினத்தன்று இரவே புறப்பட்டுப் போய் விட்டதாக அறிந்தான். கண்ணப்பன் தான் புறப்படும் நாள் தெரிந்திருந்தும் அதைத் தெரிவிக்காமலே பிரயாணப்பட்டுவிட்டதற்குக் கமலாவே காரணமாயிருக்கவேண்டுமென்றெண்ணி ஏங்கி முகவாட்டத்துடன் தன்னிருப்பிடத்திற்குத் திரும்பினான். தங்களின் துரெண்ணம் நிறைவேறாதபோதும், தங்களின் வஞ்சகவலையில் தாங்கள் எதிர்பார்த்த பறவை சிக்கிக்கொள்ளாமற் போய் விடுங்காலத்தும் காமுக ஆடவரின் நெஞ்சம் படும்பாடு கொஞ்சமா?

(தொடரும்.) S. G. R.

---

உயிர்போகும்சமயம் ஸமீபிக்கையில் மனிதன் உதைத்துக்கொள்வது போல், வஞ்சகனும் தன் கபடம் வெளிவந்த காலத்துக் கைகால்களை ஆட்டிக் கோபித்து சத்தமிடுகிறான்.



# பிரபஞ்ச தரிசனம்





குறைகள் கொண்ட தேகத்தைத் தாங்கி வரும் மனிதனுக்கு சகோதர மனிதனை 'அயோக்கியன்' என்று அழைக்கும் உரிமை உண்டா என்பது கேள்வி. எவ்விடத்திலாவது ஒரு யோக்கியக் குறைவு எவருக்கும் ஒட்டிக்கொண்டே யிருக்கும். அன்பைத் திரட்டிக் கொடுத்துப் பழகிப் பார்க்கு முன்னர் சண்டைக்குத் துவக்கும் ஒருவனை நேர்மை யுள்ளவன் என்று எவனும் அழைக்கத் துணியான். பிறனை 'அயோக்கியன்' என்று அழைப்பது எளிது. ஆனால், ஒருவன் தன்மட்டில் யோக்கியனாயிருக்க முயல்வது கஷ்டம், கஷ்டம்.

ஃ

சட்டத்திலே உயர்ந்ததொரு நிலையிருக்கிறது. கேஸில் சந்தேகம் நீதிபதிக்குத் தோற்றுமாகில், சந்தேகத்தின் லாபத்தை எதிரிக்குக் கொடுக்க வேண்டு மென்பது சட்டத்தின் தீர்ப்பு. இது ஒரு உயர்ந்த மனோ நிலையாகும்.

ஃ

ஞால வாழ்வில் எவனும் ஒரு சமயத்தில் கீழே விழத்தக்கவனே; தவறு செய்யக் கூடியவனே. கீழே விழுந்தவனைப் பார்த்து நகைப்பவன் அறிவிலி. அவ்வாறு செய்வது குழந்தைத்தனம். அறிவில்லாத மாணாக்கனைக் கண்டு குரு என்ன செய்வார்? மூட்டுத் தோழனைப் பார்த்து நண்பன் என்ன செய்வான்? கட்டுக் கடங்காத பிள்ளையைக் கண்டு தாய் என்ன செய்வாள்? குருவும், நண்பனும், தாயும் மனம் வருந்துவார்கள்; ஏளனம் செய்ய மாட்டார்கள்; கோபமும் பகையும் கொள்ள மாட்டார்கள்.

ஃ

வருத்தமும் நேசமும் கலந்தே உலக உணர்ச்சிகள் அமையும். நேசமிருக்கும் இடத்திலேதான் வருத்தம் தோன்றும். வருத்தம் கொண்ட பக்கத்திலேதான் நேசமும் நெருங்கிய உறவும் விளையும். இதுவே மனோ தர்மங்கள். பொறுப்புள்ளவன் வருந்துவான். பொறுப்பில்லாதவன் ஏளனம் செய்வான். அரிச்சந்திரன் பொறுப்பாளி; நக்ஷத்ரகன் பொறுப்பில்லாதவன். இருவர்களுடைய நடைகளையும் நாம் நாடகத்தில் கண்டதில்லையா? "அவருக்குப் பத்து ரூபாய் கொடுத்து உதவுகிறது தானே?" என்பவன் பொறுப்பில்லாதவன். அந்தப் பத்து ரூபாயை அவிழ்த்துக் கொடுப்பதிலுள்ள கஷ்டத்தையுணர்ந்தோனே பொறுப்புள்ளவன். பொறுப்புள்ளவனின் வார்த்தை நிதானத்திலிருக்கும்.

ஃ

அன்பும் அறிவும் உடலில் பின்னிக்கொண்டு உயிரை விளங்க வைப்பதுபோல, சத்தியமும் அன்பும் சரி

யான பக்குவத்தில் கூடிக் கலந்து வாழ்வையும் சாவையும் பரிசுத்தப் படுத்தவேண்டும்.

ஃ

உலக அறிவு இரண்டு வகைகளின் மூலமாக வரலாம். அனுபவ மூலமாய் வரலாம். கற்பனை அல்லது ஊகத்தின் மூலமாய் வரலாம்.

ஃ

கவிகளாய் வாழ்ந்த முதியோர் களின் சந்ததிகளாகிய நாம் அறிவும் அனுபவமும் இழந்து, கேவலம் மரக் கட்டைகளாய் வாழ்கின்றோம்.

ஃ

பிரஞ்சுக்காரர்கள் சொல்வது போல, நம்மெல்லோருக்கும் "பெரிய இடத்துப் பேச்சு"த்தான் இனிப்பை உண்டாக்குகிறது. ஸதா பெரிய இடத்துப் பேச்சைப் பேசிப் பயனற்ற சொல் மழை பொழிந்து அவ்வளவில் நின்று விடுகிறோம். அந்தப் பெரிய இடத்தை நாம் பின்பற்றுவதில்லை. இயற்கையிலேயே வெளித்தோன்றும் அன்பை எவ்வளவோ சமயங்களில் உயிரற்று மறையும்படி செய்து விடுகி றோம்.

ஃ

சிறிய சீர்திருத்தங்கள் பெரிய திருத்தங்களுக்கு விரோதியாகலாம். பெரிய கருமங்களைச் செய்து முடிக்க வல்ல ஆற்றலிருக்கும் பொழுது, அவற்றைச் செய்யாமல் சிறிய கருமங் களில் மனிதனுடைய கவலை சென்ற தாகில், அவனுடைய ஆற்றலும் ஆவ லும் அத்துடன் அழிந்து போகும். காசுமாலை செய்து தன் மனைவிக்குப் போட நினைத்தவன் பிறகு மனம் சலித்துபோய் ஐம்பது ரூபாயில் ஒரு சறடும் அட்டிகையும் செய்ய முற்படு வானாயின், அவன் அப்பால் காசுமாலை செய்வது அபூர்வமே. எப்பொழுதும் நோக்கம் பெரிதாக இருக்கவேண்டும். அற்பத்திலே திருப்திகொண்டு ஆவ லைத் தணித்துவிடக் கூடாது.

ஃ

"சிறிய சிறிய ஸம்பவங்களைக் கொண்டு உலகத்துப் பெரிய மனிதர் களின் குணாகுணங்களை நிதானம் செய்து கொள்வாயாக" என்று புளு டார்க் என்ற உத்தம ஆசிரியன் உப தேசித்தருளினார். இந்த வகையில் நாம் ஒருவரைப்பற்றி நுட்பமாய் ஆராய்ந்து, அல்லது சில தருணங்க ளில் சட்டென்று தெரிந்துகொண்டு ஒரு விதமாகத் தீர்மானிக்கிறோம். கடைசிமுடிவும் அத்தீர்மானத்திற்குப் பொருந்தியே யிருக்கும்.

ஃ

முன்னோரின் பெருமை நம் முகத்திலில்லாது வெறும் பேச்சிலிரு ந்ததால் நமது பெருமை யாவும் பொ ய்யாயிற்று. இருள் மூடி, மதிமயங்கி, மாயையிலடங்கி வாழ்ந்தவனின் உயிர் பிரகாசிக்காது. ஒரு ஜாதியின் உயிர் நிலைகள் ஏழு. அவைகளாவன:—(1) சேனை, (2) அரசியல் முறை, (3) வியா பாரம், (4) பாஷை, (5) ஸங்கீதம், (6) சித்திரம், (7) மதம். ஒரு ஜாதி சாக வேண்டுமானால், இந்த உயிர்நிலை களான ஏழையும் ஒவ்வொன்றாகக் கொன்றால் அது செத்துவிடும். வாழ் வதற்காக நாம் ஜீவிக்கிறோமா?—அல் லது சாவதற்காக நாம் ஜீவிக்கிறோமா? —என்பது வினா?

---

"ஒருவ னதாசைப் பெருக்கா லுலகில்
வருதுயர் கடவிற் பெரிதே."




1. கடல் உப்பா யிருப்பானேன்? :—ஆறுகளே சமுத்திரத்தை உப்பாக்குகின்றன. முதல் முதலில் காற்றிலிருக்கின்ற தண்ணீர் பூமியிலுள்ள பள்ளங்களில் விழுந்து சமுத்திரம் ஆக்கப்பட்டது. அவ் விஸ்தாரமான தண்ணீர் பரப்பே சமுத்திரமாகும். அது அப்படி முதலிலுண்டான காலத்தில் நல்ல தண்ணீராகவே சிறிதும் உப்பின்றி இருந்தது. பூமியில் பலவகையான மண் இருக்கிறது. ஆறுகள் பல நாடுகளின் வழியாக எத்தனையோ மண்வகைகளின்மேல் வரும்போது ஆங்காங்கிருக்கும் மண்சத்துக்களைக் கரைத்துக்கொண்டு வருகிறது. அது பின் உப்பாகக் கடலில் சேர்கிறது. நாளாக ஆக கடல் உப்பாகிறது. கடலில் இருக்கும் உப்பானது நீராவியால் உறிஞ்சப்படுவதில்லை. ஆகையால் மேலே எழும்பும் மழைத்துளிகள் நல்ல தண்ணீராகவும், கீழேயே விடப்பட்ட கடல்நீர் உப்பாகவுமே இருக்கிறது. இதனாலேயே கடல் எக்காலத்தும் உப்பாயிருக்கிறது.

2. வர்னம் நீலநிறமா யிருப்பதேன்?:—ஆகாயம் சூரியனிடமிருந்து வெளிச்சம் பெறுகிறது. சூரியன் இல்லாத காலத்தில் அதாவது இராக்காலத்தில் வானம் இருள் சூழ்ந்து மங்கலாய் இருக்கிறது. ஆகையால் ஆகாயத்தின் நீலநிறம் ஆகாயத்திலிருக்கின்ற சில வஸ்துக்களாலேயே தோன்றுகிறது. அவ்வஸ்துக்கள் சூரிய வெளிச்சத்திலெழும் பல கிரணங்களின் பல வர்ணங்களையும் வெண்மையாக்கி நீலநிறத்தை மாத்திரம் ஒன்றும்செய்ய இயலாமல் அதை மாத்திரம் கீழிருக்கும் நமக்குப் பிரதிபிம்பிக்கச் செய்கின்றது. அவ்வஸ்துக்கள் யாவையெனில், அவையே ஆகாயத்தில் நிறைந்திருக்கும் எண்ணற்ற தூசியாகும். அந்த அந்தகார தூசிமயம் சூரியனுடைய பல வர்ணங்களை வெண்மைப்படுத்தி நீலநிறத்தை மாத்திரம் பிரதிபிம்பித்து ஆகாயம் நீலநிறமெனத் தோற்றுவிக்கிறது. அத்தூசியை நாம் அகற்ற முடிந்ததானால் ஆகாயம் மங்கலாகவும், சூரிய வெளிச்சத்தின் பல வர்ணங்கள் நமக்குப் பிரதிபிம்பிப்பதாயும் இருக்கும். ஆகாய வெளிச்சமானது சூரிய வெளிச்சத்தின் பிரதிபிம்பமே. அதுவும் நீலநிறப் பிரதிபிம்பமே.

3. ஆறுகள் ஏன் சமுத்திரத்தில் சங்கமமாகின்றன? :—பூமியின் மட்டம் சமமாக எங்குமிருப்பதில்லை. பூமியின் மேற்பரப்பில் மலைகளும், குன்றுகளும், பள்ளத்தாக்குகளும், பள்ளங்களும் நிறைந்திருக்கின்றன. ஓடும் எவ்வகை ஜலபதார்த்தமும் பூமியிலிருக்கின்ற ஒரு சக்தியால் பூமியின் நடுப்பாகத்திற்கு இழுக்கப்படுகிறது, அதற்கே ஆகர்ஷண சக்தியெனப்படும். நாம் ஒரு வஸ்துவை மேலே எறிந்தோமானால் அது பூமியினுடைய ஆகர்ஷண சக்தியினால் கீழே கொண்டுவரப்படுகிறது. அம்

---

ஒருவனின் கையில் வேண்டிய பணம் இருக்கிறதென்று வெளிக்குத் தெரிந்த பிறகு அவனை அதிகமாக விரோதிக்கப் பின்னடைகிறார்கள். தாங்கள் ஒரு கெடுதியும் செய்யவில்லை யென்று கெடுதி செய்தவர்களே சொல்லவும் ஆரம்பித்துக்கொள்ளுகிறார்கள்.

மாதிரியே தண்ணீரையும் அவ் வாகர்ஷண சக்தி நடுப்பாகத்திற்கு இழுக்கிறது. ஆகையால், உலகிலுள்ள எல்லாத் தண்ணீரும் பூமியின் நடுப் பாகத்திற்கு விரைந்தோடுகின்றன. பூமியின் நடுப்பாகமும், பூமியின் சம மட்டத்திற்கு மிகவும் தாழ்ந்தது மான இடம் கடலின் மத்தியிலேயே இருப்பதினால் அக்கடலில் போய் சங்கமமாகின்றன. நம் கண்ணிற்கு அசைவில்லாது தோன்றும் தண்ணீரும் பூமியின் நடுப்பாகத்திற்கே ஓடுகின்றது. அதனாலேயே ஆறுகள் சமுத்திரத்தில் போய் விழுகின்றன.

4. நாம் சந்தோஷமாயிருக்கையில் ஏன் சிரிக்கிறோம்?:—கடவுள் நாம் சந்தோஷமா யிருக்கையில் சிரிக்கவைக்கிறார் என்று சொன்னால் அது பொருந்தாது. சந்தோஷத்தினால் சிரிப்பதற்கு நம் மூளையும் நம் உடம்புமே காரணமாகும். நீ குதுகலமா யிருக்கையிலேயே சிரிக்கிறாய். ஒரு அதிக வெளிச்சமான வஸ்து உன் கண்முன் தோன்றினால் நீ விரைவில் என்ன செய்கிறாய்? இரு கண்களையும் மூடிக்கொள்கிறாய். எதற்காகக் கண்களை மூடிக்கொண்டா யெனில், மூளையாகிய மந்திரி இட்ட கட்டளையின்மேல் உனக்குத் தெரியாமலே கண்களை மூடிக்கொண்டு விட்டாய். அவ்வாறே நீ சிரிக்கும்போதும் ஒன்றுக்கு மீறிய பல காரியங்கள் செய்கிறாய். கண்களிட மிருக்கும் சதைப்பற்றுக்களை மாத்திரம் அசைக்காமல் உன் முகத்திலிருக்கும் பல சதைப்பற்றுக்களையும் அசைக்கிறாய். அவையெல்லாம் ஒருங்கே சேர்ந்து ஒருவித சத்தத்தை உண்டாக்குகிறது. அதே சிரிப்பாகும். ஆகையால் சிரிப்பென்பது நம் முகத்தில் தோன்றும் எண்ணிறந்த சதைப்பற்றுக்களின் அசைவினால் ஏற்படும் சப்தமேயன்றி மற்றன்று.

5. நாம் ஏன் கண்ணீர்விட வேண்டும்?:—நாம் அழுகையில் கண்ணீர் தாரைதாரையாக வருகிறது. நாம் விழித்திருக்கும்போதும் சதாகாலமும் நமக்குத் தெரியாமலே கண்ணீர்விட்டுக்கொண்டுதான் இருக்கிறோம். நாம் வினாடிக்கொருதடவை கண்ணிமைகளைமூடித்திறந்துகொண்டிருப்பதை அறிவோம். நீ வேண்டுமென்று அவ்வாறு செய்வதில்லை. ஆனால், செய்திருக்கவும் முடியாது. நீ வேண்டுமென்று கண்ணிமைத்தலை நிறுத்தினால் உன் கண்கள் அவதிப்படுகின்றன. நீ அப்படியே அப்பியாசிப்பாயானால் உன் கண்கள் சரிவர வேலையைச் செய்யா. உன் கண்கள் திறந்திருக்கையில் அதன் வெளிப்பாகம் தூசியாலும் குப்பையாலும் அடைக்கப்பட ஏதுவா யிருக்கிறது. அதுவுமில்லாமல் வெளிப்பாகம் சீக்கிரத்தில் சாய்ந்துவிடுகிறது. சாய்ந்துவிட்டால் நாம் சரிவரப் பார்க்க இயலாது. அப்படி யிருந்தும் நம் கண்களின் வெளிப்பாகம் எப்படி எப்போதும் சுத்தமாயிருக்கிறது? அது எப்படியெனில், நாம் கண்ணிமைக்கும் ஒவ்வொருதடவையும் நம் கண்களைச் சுத்தப்படுத்துகிறோம். ஒவ்வொரு கண்ணிற்கும் சற்று உயரத்தில் கண்ணீர் பையொன்றிருக்கிறது. நாம் விழித்திருக்கும் சதாகாலமும் அப்பையானது தண்ணீரை உண்டுபண்ணுகிறது. நம்கண்களின்வெளிப்பாகம்

---

கண்படைத்த பெரும்பயன் அடைவதுதான் காணமுடியாததாயிருந்து, காணவேண்டுமென்று பலநாள் ஆவலுற்றுப் பிறகொருநாள் கிடைக்கும் ஒரு சந்நதியில்தான். அதற்காக எவ்வளவு கஷ்டத்தையும் செலவுகளையும் சகித்துக் கொள்ள சித்தமாகிறார்கள்.

சாய்ந்துகொண்டு வருகையில் நம் கண்கள் மூளைக்குத் தெரிவிக்கின்றன. அம்மூளை கண்ணிமைகளுக்கு உத்தர விடுகிறது. அப்படி உத்தரவிடுகை யில் அக்கண்ணிமை ஒவ்வொரு தட வையும் கீழே வரும்போது ஒவ்வொரு துளி கண்ணீரைக் கொண்டுவந்து கண்ணின் வெளிப் பாகத்தை நனைக் கிறது. அக்கண்ணீரே நம் கண்களைச் சுத்தம் செய்யும் நீரும், அதற்குப் புத்துயிரளிக்கும் வஸ்துவுமாகும்.

6. **நம் பிரதிபிம்பம் கண்ணாடி யில் எப்படித் தெரிகிறது?**:—நாம் பார்க்கும் கண்ணாடியின் பின்னால் ரசம் பூசப்பட்டிருக்கிறது. அங்கு ரசமில்லாவிட்டால் சாதாரணக் கண் ணாடிகளில் பார்த்தால் எவ்விதமிருக் குமோ அவ்வாறிருக்கலாம். கண்ணாடி யில் பூசப்பட்டிருக்கும் ரசம் கண் ணாடியின் வழியாக வெளியே போகும் வெளிச்சத்தைத் தடுத்து, பின்னால் எதிர்த்துப் பிரதிபிம்பிக்கச் செய்கி றது. கண்ணாடியும் ரசமும் மெது வாகவும் சமமாகவு மிருக்கிறது.

7. **பறவைகள் ஏன் பாடுகின் றன?**:—ஒரு குழந்தையாவது, பற வையாவது அல்லது ஏதாவது பாடி னால் அது பாடுவது அதனுள் மறைத்துவைத்திருக்கும் உணர்ச்சி களை வெளிப்படுத்தவே. உன்னிடத் தில் ஒரு உணர்ச்சியுமில்லையேல் நீ பாடமாட்டாய். பறவைகள் பாடுவ தும் அவைகளின் உணர்ச்சியைக் காட்டவே. அப்படிப் பாடுகையில் அவைகள் உலகில் எவ்வளவு சந்தோ ஷமாயிருக்கின்றன எனக் காட்டுகின் றன. பறவைகள் பாடுவது அவைக ளின் சந்தோஷத்தைக் குறிப்பிடவே. ஒருபறவை துக்கமாகவாவது, உடம்பு அசௌக்கியமாகவாவது இருந்தா னால் அது பாடவே பாடாது. சாதார ணமாகப் பறவைகள் பாடுவது தங்கள் காதலியையாவது காதலனையாவது அழைப்பதற்காகவாம். சிற்சில சமயங் களில் அவைகள் இவ்வுலகில் வசிப்ப தற்காகவே பாடுமாம். ஆகையால் பறவைகள் பாடுவது அவைகளின் சந்தோஷமிகுதியின் அறிகுறியாகும் என அறிகிறோம்.

8. **ஏன் பறவைகள் அதிக தூரத்தில் பறக்கின்றன?**:—நம் கண்கள் சரிவர இருந்தால் நாம் அதிக உயரம் போனால் அதிகமான வஸ்துக் களையும் இடங்களையும் பார்க்க முடி கிறதென்று அனுபவ பூர்வமாய் பரீக்ஷித்திருக்கிறோம். பறவைகளுக்குக் கண் பார்வை அதிக தீக்ஷண்யம். அவைகளின் கண்கள் நம் கண்களை விட மிகவும் நுண்ணிய பார்வையுடை யவை. பெரிய பறவைகள் அதிக உய ரத்திலிருந்தே அதிக சிறிய வஸ்துக் களையும் பார்க்கின்றன. இப்பறவை கள் பறக்கையிலேயே பூமியைச் சரிவரக் கவனிக்கின்றன. அக்காலத் தில் எந்த ஆகாரத்தையும் அவைகள் கண்டு அங்கு விரைந்து சென்று அவைகளைக் கொள்ளுகின்றன. ஆகை யால், அவைகள் அதிக உயரத்தில் பறந்து தங்கள் வேலைகளைச் சுலப மாக்கிக்கொள்கின்றன.

S. ஸ்ரீரங்கராஜு,

"ஜெகந்நாத பாக்", சைதாபேட்டை.

---

தாங்கள் ஒருவனைப்பற்றித் தூஷித்தது வெளியில் பரவிவிட்டதென்பதை யறிந்ததும், ஓ! நான் அப்படி சொல்லவேயில்லை, எந்தப் பயலோ போக்கிரி அவ்விதம் வேண்டுமென்றே கூறியிருக்கிறான் என்று ஆரவாரிப்பர். இவர்க ளின் ஆத்திர குணமே இவர்களைக் காட்டிவிடுகிறது.




## தூக்கிட்டுக்கொள்வதாய்ப் பயமுறுத்தல்.

ஐயா,



நான் எவ்வளவோ பொறுமையுடனும் சாந்தத்துடனும் என் இல்வாழ்க்கையை நடத்திக்கொண்டு வருகிறேன். எத்தனையோ செலவுகளை மௌனமாய்த் தாங்கி நிற்கின்றேன். என் மனைவியின் பிரியப்படியே வீட்டுச் செலவுகளைத் தாராள மனதுடனும் செய்து வருகிறேன். அவளைச் சேர்ந்தவர்களின் கூட்டம் வந்து எத்தனை நாட்கள் இருந்தாலும் நான் வாய் திறப்பதில்லை. எந்தெந்த வகையிலெல்லாம் என் மனைவிக்குத் திருப்தியுண்டாக்க முடியுமோ அவ்வளவுக்கும் பிரயத்தனிக்கிறேன். காபி பலகாரம் இவைகளுடன் நல்ல பதார்த்தங்கள் காய்கறிகளோடுமே தினசரி போஜனம் நடக்கின்றது. நான் சில பெரிய குடும்பங்களில் பல நாள் இருந்து புசித்திருக்கிறேன். அவ்விடத்தில் நடக்கும் செலவுகளையும் புசிப்பையும் போலவேதான் என் வீட்டிலும் நான் நடத்துவதாக எனக்குத் தோன்றுகின்றது. எவ்வளவுக்கு எனக்கு சக்தியுண்டோ அவ்வளவுக்கும் மனஸ்பூர்வமாய் வீட்டுச் செலவுகளை நடத்துகிறேன். இவ்விதம் செய்தும் என் மனைவிக்குத் திருப்தி என்பதேயில்லை. மாலையில் பக்ஷணங்களும் வாங்கித்தருகிறேன். சிலவேளைகளில் கையில் காசு இல்லாவிட்டால் மாலைப் பக்ஷணங்கள் கிடையாதுதான். மற்றபடி சாதாரணமாகவே மாலையில் செலவிடுவது வழக்கம். என் வருமானம் மிகக் குறைவாயினும் அதை நான் என் மனைவியிடம் சொல்லிக்கொள்வதில்லை. அவளுக்கு விசேஷித்த நகைகள் அணிய மிக்க அவா. என் அல்ப சம்பாத்திய நிலையில்,—வருவதெல்லாம் செலவாகிவிடும் நிலையில்,—எனக்கு ஆபரணங்கள் செய்ய சக்தியில்லைதான். பழைய நகைகளை உருக்கிப் புது நகைகளாக்குவதும் உண்டு.

ஃ

வீட்டு சம்சார விஷயத்தைத் தெளிவாக மேலே கூறிவிட்டதாய் நம்புகிறேன். கடவுள் இவ்வளவேனும் மானமாய்க் கஞ்சிவார்க்கிறாரே என்று நான் அதிக திருப்தியோடும் ஸந்தோஷப்பட்டுப் பகவானைத் துதிக்கும் சுபாவமுள்ளவன். என் மனைவிக்கோ இந்த அறிவு கிடையாது. ஓயாத செலவுகள் வைத்தபடியே இருப்பாள். சில்லரைக் காசுகள் வேறே தரவேண்டும். அப்படியே நான் தந்து வருகிறேன். என்னை அவள் கவனிப்பதில்லாவிடினும், என் முதுகை நானே தேய்த்துக்கொண்டு குளிப்பதாயிருப்பினும், அவளுக்கு நான் எவ்வித குறைவும் வைக்கவில்லை. எவ்வாறேனும் வாழ்க்கை நடந்தால் போதுமென்பதும், எந்த வகையிலேனும் பலாத்காரமாய் சந்தோஷத்தை வலிய இழுத்துப் போட்டுக்கொண்டு பொழுதை ஆநந்தமாகவே கழித்துவிடவேண்டுமென்பது என் எண்

ணம். என் மனைவி எத்தனை ஏசினும் பேசினும் நற்புத்தி சொல்லித் திருத்தப் பார்ப்பதே என் சுபாவம். இவ்விதம் நான் சாந்தமாய் அடங்கி நடப்பது கண்டு அவள் மிக மீறுகிறாள்; அட்டகாசம் செய்கிறாள்; வாய்க்கு வந்தபடி பேசுகிறாள். கடைசியாக இன்னொன்றும் செய்கிறாள். அறைக்குள் நுழைந்து கதவை மூடிக்கொண்டு தூக்கிட்டுக் கொள்வதாகவும், என்னைப் போலீஸார் கைதி செய்யும்படி செய்வதாகவும் என்னைப் பயமுறுத்துகிறாள். இப்படியே ஒரு தரம் கயிறுடன் ஒரு அறைக்குள் புகுந்து கதவை உள்தாள்ப்பாளிட்டுக் கொண்டாள். நான் பயந்து போய்ப் பக்கத்து வீட்டினரை யழைத்துவர, அவர்கள் கதவைத் தட்டித் திறக்கச் செய்து, பிறகு கதவையே எடுத்து வேறிடத்தில் வைத்து விட்டனர். வீடு அன்று வெகு அலங்கோலமானது. நான் பட்ட அவதிகள் என் மனைவிக்கு வெகு திருப்தியாக இருந்தது. என் மனைவியின் விஷயத்தைப் போலீஸுக்குத் தெரிவிக்க நினைத்ததில் சிலர் வேண்டா மென்று தடுத்து விட்டனர்.

ஃ

இவ்விதம் ஒருதரம் அவள் என்னைப் பயமுறுத்தித் தேறி விட்டதால், அதற்குப்பின் எந்த அல்ப சங்கதிக்கும் "இதோ நான் தூக்குபோட்டுக்கொண்டு உன்மேல் பழிபோடுகிறேன்" என்று கூறிக் கொட்டடிக்குட் சென்று உள்தாள்ப்பா ளிட்டுக் கொள்வதை வழக்கமாகக் கொண்டு விட்டாள். மறுபடியும் அயல் வீட்டாரை யழைத்து என் குடும்ப அலங்கோலத்தை வெளியில்கொட்ட நாணி தெய்வம் விட்ட வழி யென்று தெருத்திண்ணையில் மௌனமாய் உட்கார்ந்து விடுவதையே வழக்கமாக்கி விட்டேன். இவளும் அறைக்குள் நெடு நேரமிருந்துவிட்டு வெளியில் எந்த ஓசையும் காணாததால் மெதுவாகக் கதவைத்திறந்து பார்த்து விட்டு மௌனமாயிருந்து விடத் தொடங்குவதானாள். இவ்விதம் பல தடவை நடந்துள்ளது. ஒவ்வொரு தடவையும் கடவுள் காப்பாற்றி யிருக்கிறார். ஆத்திர புத்தியுள்ளவளான என் மனைவி எங்கே ஒரு சமயத்தில் உண்மையாகவே தூக்கிட்டுக் கொண்டு விடுவாளோ என்ற அச்சம் என்னைப் பெரிதும் வதைக்கின்றது. கதவோ திறக்க முடியாது. இவள் தன்னை மறந்த ஆத்திரத்தில் எதுவும் செய்யக்கூடியவள். நானோ மானமாய்ப் பிழைப்பவன். நான் ஒரு சிறு கடலை வியாபாரி. என் தலைவிதி சாதுவான எனக்கு இந்த ஆத்திர குணமுள்ளவள் மனைவியாக வந்திருக்கிறாள். இதற்கு எப்படி நிவர்த்தி என்பது தெரியவில்லை. எவ்வளவு திருத்தியும், நல்ல புத்திகள் சொல்லியும், அவள் இஷ்டப்படி நடந்தும் நற்குணமுள்ளவளாவதாகக் காணோம். இவ்விஷயத்தில் தங்களிடமிருந்து ஏதாவது தேறுதல்பெற எண்ணி இதை எழுதினேன். என் பெயரை வெளியிட வேண்டாம்.

நொந்த நெஞ்சு.
திருநெல்வேலி.

[என்னபதில் சொல்வதென்றுநமக்குத் தெரியவில்லை. திருந்ாதவர்களாகவே சிலர் பிறந்துவிடுவதில் அவர்களை என்றைக்கும் திருத்த முடியாமலே போய்விடுகிறது. சொல்லாமல் வெளியூர்களுக்குச் சென்றுவிடுவதும் ஒரு தக்க ஔஷதமாகலாம். அவ்வளவுக்கு நெஞ்சு துணிந்து கல்மனதாகி மக்களை விட்டுப் பிரியத் தைரியப்பட வேண்டுமே? அது முடியுமா என்பது தான் பெரிய கேள்வி. ப-ர்.]




(87-ம் பக்கத் தொடர்ச்சி.)



---

778. A noble example makes difficult exercises easy.

ஒரு சிறந்த வழிகாட்டலானது அநேக கடின காரியங்களை இலேசாக்குகின்றது.

774. A word once uttered can never be recalled.

நாவினாற் சுட்ட புண் எக்காலத்தினும் ஆறாது.

775. There are two sides to every question.

ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் இரண்டு வழிகள் இருக்கின்றன.

776. Let the ear despise nothing, nor yet be too ready to believe.

காதுகள் கேட்பவற்றையெல்லாம் விட்டு விடவுங்கூடாது. எல்லாவற்றையும் நம்பவுங் கூடாது.

777. A friend may well be reckoned the masterpiece of nature.

ஒரு சிறந்த சிநேகிதன் இயற்கையினுஞ் சிறந்தோனாவன்.

778. Every light has its shadow.

ஒவ்வொரு விளக்குக்கும் அதன் நிழல் இருக்கிறது.

779. Small showers last long, but sudden storms are short.

சிறு தூறல்கள் நீண்டகாலம் நீடிக்கும். ஆனால், புயல்காற்றுகள் சிறிது காலமே ஆர்ப்பரிக்கும்.

780. An angry man opens his mouth and shuts his eyes.

கோபங்கொண்ட ஒரு மனிதன் தன் வாயைத்திறந்து உறக்கக் கத்திக்கொண்டு தன் கண்ணை மூடியபடியே செய்யவொண்ணாததை யெல்லாம் செய்கிறான்.

781. Better buy than borrow.

இரவல் வாங்குவதைவிட, சொந்தமாக வாங்கிவிடு.

782. Beauty and folly are often companions.

அழகும் மூடத்தனமும் எப்பொழுதும் சிறந்த சிநேகர்கள். (அழகு பிறரை வசீகரிக்கவல்லது. மூடத்தனம் பிறர் புத்தியைக் கேட்டுக் கீழ்ப்படிந்து நடக்கவைக்கும்.)

783. Silence is often the best answer.

மௌனம் எப்பொழுதும் சிறந்த பதிலாகும்.

784. A word in earnest is as good as a speech.

பணிந்து கூறும் வார்த்தை ஒரு பெரிய பிரஸங்கத்தைப்போல் நன்மையைத் தரும்.

785. Good training is always desirable.

நல்ல அப்பியாசம் எப்பொழுதும் விரும்பத்தக்கது.

786. Never too old to turn, never too late to learn.

நல்வழிக்குத் திரும்ப இப்போதே முயற்சிசெய்; தாமதிக்காதே. ஒன்றைக் கற்கவும் தாமதிக்காதே.

787. A good painter can draw a devil as well as an angel.

ஒரு சிறந்த சித்திரம் வரைவோன் ஒரு தேவதூதனையும் வரையமுடியும்; ஒரு அவலக்ஷணம் பொருந்திய பிசாசையும் வரையமுடியும்.

788. If you have friends in adversity stand by them.

உன் சிநேகர்கள் கஷ்டதிசையிலிருந்தால் அவர்களுக்குத் தக்க உதவி செய்.

789. He that is too proud to ask is too good to receive.

எவனொருவன் யாசிப்பது கௌரவம் எனக் கொள்கிறானோ அவன் பிறரிடமிருந்து பெற மிகவும் ஸந்தோஷப்படுவான்.

790. Let your trouble tarry till its own day comes.

உன் கஷ்டத்திற்கு முடிவு வரும் வரை அது தாண்டவமாடும்.

791. Do the duty that lies nearest to you.

உன் பக்கலிலிருக்கும் கடமையைச் செய்.

792. A good asker needs a good listener.

புகழ்ந்துபேசி யாசிப்போனுக்கு அவன் கூறுவதைக் கேட்க ஒருவன் இருக்கவேண்டும்.

793. A man's task is light if his heart is light.

எவன் மனதில் கவலைகொள்ளாதிருக்கிறானோ அவன் வேலை இலேசாய் இருக்கும்.

794. Our patience will achieve more than our force.

நம் பொறுமை நம் வலுவைவிடச் சக்தி வாய்ந்தது. சக்தியால் செய்ய இயலாததைப் பொறுமையால் செய்துவிடலாம்.

795. Nothing so bad as not to be good for something.

எந்தக் கெட்டதுவும் எதற்காவது உதவாமல் இருக்காது.

796. He who chases another does not sit still himself.

ஒருவனை விரட்டுவோன் ஒருக்காலும் அமைதியாக வீற்றிருக்கமாட்டான்.

797. A man may be young in years, yet old in hours.

ஒரு மனிதன் வயதில் சிறுவனாயிருக்கலாம்; ஆனால் புத்தியிலோ முதிர்ந்தோனாயிருக்கலாம்.

S. ஸ்ரீரங்க ராஜு,
"ஜெகந்நாத பாக்" சைதாபேட்டை.

---

பல்வேறு தொழில்களிடையிலும், பிணி கவலையாதிகளின் நடுவிலும், ஆங்காங்கு அகப்பட்ட அவகாசங்களிலும் தான் ஆசிரியர்கள் நூல் இயற்றுதலென்னும் தொழிலைச் சிறிது சிறிதாகச் செய்யவேண்டியுளது.




## 3. இல்லறம்.

(111-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 261. அண்ணன் பேரிலிருந்த கோபத்தை நாய் பேரிலாற்றினன்."

இந்தப் பழமொழியை "இல்லறம்" என்ற தலைப்பிற் சொல்லும் பொழுது வேறுவித பொருளில்தான் அமைக்கவேண்டும். அண்ணன் தம்பி அபிமானம் எல்லாம் அவரவர்கட்கு விவாகமாகும் வரையில்தான். மனைவி என்று ஒருத்தி வந்ததும் சகோதரர்களின் மனம் பேதப்பட்டு விடும்படி பல ஸம்பவங்கள் நேர்ந்து விடுகின்றன. அண்ணனின் மனைவிக்கும் தம்பியின் மனைவிக்கும் அநேகமாய் ஒற்றுமை யிருப்பதில்லை. இவ்விரு பெண்களுக்குள் கலகம் நேரிட, அதில் ஸகோதரர்களும் சம்பந்தப்பட்டு அதனல் குடும்பப் பிரிவினையும் உண்டாகின்றது. நேற்று வந்தவளுக்கு இவ்வளவு அடமா என்று அண்ணன் தன் தம்பியின் மனைவியை அடித்து விடுகிறான். தம்பிக்கு அது சகிக்காமல் அண்ணன் பேரில் எழுந்த கோபத்தை அருகிலிருக்கும் நாயின் பேரில் செலுத்தி அதை அடித்துத் துரத்துகிறான். அடிபட்ட தம்பியின் மனைவியோ தான்பட்ட அடியை ஞாபகத்தில் மறவாமல் வைத்துக்கொண்டு தன் கணவனை வேறு குடித்தனமாகப் பிரிந்து விடச்செய்து விடுகிறாள். அதன்பின் ஸகோதரர்கள் இருவரும் தனித்தனிக் குடித்தனமாகிறார்கள். பிரிந்துபோன பின்பு ஒருவன் நன்மையை மற்றவன் எண்ணிப் பாராமல் அவனவன் தன் சுகத்தை மட்டும் கவனித்துக்கொண்டு விலகி விடுகிறான். எங்கேயோ சில குடும்பங்களில் அண்ணன் தம்பிகள் ஒத்து வாழ்ந்தாலும் அவர்களின் கடைசி காலத்தில் குடும்பச் சொத்து பங்கிடப்பட்டுப் போவது தான் அதிகம்.

### 262. "அமைச்சனில்லாத அரசும், ஆமுடையானில்லா ஆரிழையும்"

ஒரு அரசுக்கு அமைச்சனும், ஒரு பெண்ணுக்குக் கணவனும் அவசியம் வேண்டுமென்றபடி. பிராமணரல்லாதாரிற் பலர் மங்கைப் பருவமடைந்த பெண்களைப் பல வருடகாலம் வரையில் விவாகமில்லாமலே வைத்து விடுகிறார்கள். குடும்ப கஷ்டங்களால் இவ்விதம் நேர்ந்தபோதிலும் பெண்களின் மனக்கசப்பை பகவானே அறியவேண்டும்.

### 263. "அவள் பேர் தங்கமாம், அவள் காதில் பிச்சோலையாம்"

பெண்ணுக்குப் பேர் சாவித்திரி, தமயந்தி, ஜானகி என்று அழகாகவே அமைந்திருக்கிறது. பேரின் அழகுக்குத் தகுந்தபடி குடித்தன அழகைக்

---

தன்பாடு எங்ஙனம் ஆயினும், தன்னைச் சார்ந்தவர் சுகத்தைப் பாராட்டிக் கவனித்தல் ஒரு பெருங் குணமாகும்.

காணவில்லை. கணவனோடும் ஒத்து வாழ்வதில்லை. சதா குடும்பத்தில் சண்டைக்குப் பிரயத்தனம் செய்வதும், அடங்காப் பிடாரியாக நிற்பதுமானால் இந்த அழகான பெயர்களைக் கொண்டதால் என்ன பயன்?

264. "அழகு சோறு போடுமா? அதிர்ஷ்டம் சோறு போடுமா?"

பல ரூபவதிகளான நங்கையர் உதவாக்கட்டைகளுக்கும், வீட்டிலேயே பாரமாக விழுந்து கிடப்பவர்களுக்கும், துராத்மாக்களுக்கும் மனைவியாகிப் படும்பாட்டைக் காணில், அழகு சோறுபோடவில்லையென்றே சொல்ல நேர்கிறது. அழகற்றிருந்தும் பல பெண்கள் மேன்மையான சௌக்கிய நிலையில் இருப்பதை நோக்குமிடத்தில் அதிர்ஷ்டம்தான் சோறுபோடுமென்று தோன்றுகிறது. ஆயினும், சில வநிதா ரத்னங்களின் முகத்தில் விளங்கும் லக்ஷ்மீவிலாஸமானது அவர்கள் விருத்தாப்பிய வயதை யடைந்தாலும் வைரங்களைப்போன்றும் ஒளியுடன் பிரகாசிக்கின்றது. அத்தகைய லக்ஷ்மிகள் வாழும் மனையில் என்றைக்கும் ஒரு குறைவும் ஏற்படுவதில்லை. மேலும், அவர்கள் இருக்கும் வரையில்தான் குடும்ப ஒற்றுமை என்று உலகினர் அவர்களைச் சிலாகித்துப் பேசும்படியும் மேன்மைப்படுகிறார்கள்.

265. "அழகுக்கு இட்டால் ஆபத்துக்கு உதவும்."

அழகு பார்ப்பதற்கென்று தன் மனைவிக்கு இடும் நகைகள் தன் ஆபத்துக்கும் உதவுவதுடன், அந்தப் பெண்ணுக்கும் அது ஒரு சொந்த சொத்தாகவும் ஆகிவிடுகின்றன. வீட்டுக்காரனுக்கு எவ்வளவு கடன் இருந்தபோதிலும், அவன் மனைவிமீதுள்ள நகைகளைக் கடன்காரர் கைப்பற்றிக்கொள்ளச் சட்டப்படி சுதந்திரமில்லை. தாயாதிகளாலும் பறித்துக்கொள்ள முடியாது. அழகுக்கு என்று நகைகள் செய்வது சரியானாலும், அதை ஒரு குறித்த அளவில் முடித்தும், மனைவியின்பேருக்கு நகைக்குப் பதிலாகப் பாங்கியில் முதலிட்டு வருவது உத்தமமாகும். அது உயிருடன் வளரும் முதலாகவும் இருக்கும்.

266. "அழுதாலும் பிள்ளை அவளே பெறவேண்டும்."

குடும்பத்தில் நாளைக்கு நேரும் கஷ்ட நஷ்டச் சுமைகளைத் தன் கணவனோடு தான் தான் படவேண்டுமேயன்றி, இன்றைக்கு சட்டவட்டமாய் சம்பிரமமாய் விருந்துண்டு கொண்டாடிப் பேசிவிட்டுச் செல்லும் பந்துக்கள் ஒருபோதும் தாங்கார்கள். ஆதலின், கணவனை வருத்தி வீண்செலவுகளைச் செய்ய வைத்துக் குடும்பத்தில் கடன்பாரத்தை அதிகப்படுத்துவது கூடாது, கணவன் படுகிற கஷ்டத்தைத் தானும் உணர்ந்து நல்ல புத்தியோடும் சிக்கனத்தோடும் நடந்துகொள்ளப் பார்ப்பதே விவேகமாகும். இன்றைக்கு நடத்திய விருந்துகளால் பெறுகிற கௌரவம் நாளைக்கு வரும் கடன் வாரண்டால் மண்ணோடு மடிந்துவிடும்.

267 "அறுதலி மகனுக்கு வாழ்க்கைப்பட்டு விருதாவிலே தாலியறுத்தேன்."

இவ்விதமும் சில பெண்களின் இல்வாழ்க்கை புலம்பும்படி நேர்ந்துவிடுகிறது. "கிதியும் கணவனும் நேர்படினும் தந்தம் விதியின்பயனே பயன்." என்று சொல்வதைத் தவிர வேறென்ன பேசுவதோ?

268. "அறுப்புக் காலத்திலே எலிக்கு ஐந்து பெண்ஜாதி."

சிலர் செல்வ மமதையினால், ஒருமனைவி யிருக்கும்பொழுதே மற்றொரு பெண்ணையும் மணந்துகொண்டு உல்லாஸம் காணப் புறப்படுகிறார்கள். இதில் குடும்பமும், சொத்துக்களும் எவ்வளவு சின்னாபின்னமாகிற தென்பதைக் கவனிப்பதில்லை. ஒரு பெண்ணுக்குமேல் இன்னொரு பெண் மனைவியாகவோ—உபநாயகியாகவோ—தாசியாகவோ எவ்விதமாக வந்தபோதிலும், அவ்விதம் வந்த குடித்தனம் சீர்படுவதில்லை யென்பதே பலரும் கண்ட அனுபவம், சொத்துக்கள் அழிவதுடன் கடனும் சூழ்கின்றது.

269. "அன்னம் மிகக் கொள்வானும், ஆடை அழுக்கு ஆவானும் பதர்."

சிலர் முக்கால்பானை சோற்றையும் ஒரே தடவையில் ஜீரணம் செய்து விடுவதில் சமர்த்தர்கள். அவர்களுக்கு என்றைக்கும் தரித்திரமாகத்தா னிருப்ப தாய்ச் சொல்லும்படியாகிறது. உண்பதிலும் ஒரு அளவும் மிதமும் வேண்டு மென்பது கருத்து. குடும்பத்தில் தரித்திரம் சூழும்பொழுது அதிகமாய் உண்பதும், செல்வம் நிறைந்த காலத்தில் சிறிது உணவுகளுடன் திருப்திபட்டுப் போவதும் ஒரு பெரிய அனுபவம். இவ்விதமே ஒருவன் உடுத்தியிருக்கும் ஆடையைக்கொண்டே அவனது செல்வ நிலையையும் தரித்திர புத்தியையும் கூறிவிடமுடியும். ஒரே வேஷ்டியாயினும் அதையே நன்றாகத் துவைத்து யுடுத்திச் சுசிகரமாக இருப்போரும் உண்டு அத்தகையோர் எவ்வளவு ஏழ்மையிலிருப்பினும் பிறாது மதிப்புக்கு உரியவராகின்றனர். அழுக்குத் துணி தரித்திரத்திற்கு அடையாளமென்பர். துணியின் சுசிகரத்திற்குத் தக்கபடியே புத்தி நிஷண்ணியமும் இருக்கும்.

270 "அன்னியமாதர் அவதிக்கு உதவுவாரா ?"

"அவதி" என்பதை இங்கு பல அர்த்தங்களுக்குக் கொண்டுபோகலாம். தனக்கென்று சொந்தமாக ஒரு பெண் இருப்பதற்குச் சமானம் உலகில் வேறில்லையென்றே ஒரு நங்கையை மணமுடிப்பதாகும். அது இல்லறத்தின் தனிப்பட்ட ஒரு சிலாக்கியத்தினை எடுத்துக் காட்டுவதாகவும் இருக்கிறது. கணவனின் கஷ்டசுகத்தைப் பொறுத்தே தன் வாழ்வும் என்று நினைக்கக் கூடியவள் மனைவி யொருத்திதான். அதற்காகத்தான் சில ஆடவர்கள் அகங்கார மனைவிகளோடும் பொறுத்துக்கொண்டு மனமொத்து வாழ முயல்கிறார்கள். ஒருவனுக்கு மனைவியிருக்கும் வரையில் அவன்மீது ஒரு நம்பிக்கை வைக்கலாம்; அவனது நல்லொழுக்கமும் கெடாதிருக்கலாம்; அவனும் உலகத்தில் ஒரு மனிதனாக நாலுபேருக்கு முன் நின்று தாம்பூலம் பெற்றுக்கொள்ளலாம். "இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றில்லை." (தொடரும்.)

---

ஒவ்வொருவனுக்கும் ஏதோ ஒருவகையாய் அவனது சுபாவத்திற்கேற்ற கண்ணியமான விதமாகக் காலங்கழிக்கும்வழி இருந்தே தீரவேண்டும். ஆனால், அந்தவழி லௌகீக விஷயமாய்ப் பார்க்குமிடத்துக் கண்ணியமானதே யென்று ஒருவகையில் ஏற்படினும், வைதீகத்துக்கு அது ஒத்துக்கொள்ளாமலிருக்கலாம். அதற்கென்ன செய்வது ?






இதோவென்று அப்போதே உன் காரியத்தை முடித்துக் கொடுத்து விடுகிறவர்கள் போல் வேலை செய்யத் தொடங்குகிறவர்களிடம் கடைசி வரையில் உட்கார்ந்திருந்து வேலை செய்து தீர்த்துக்கொண்டுபோ. அப்போதுதான் உன்வேலை முடியும். அவ்விதமின்றி நமது வேலையைத் தொட்டுக்கொண்டார்கள், இனி நாம் ஊருக்குப்போகலாம், தபால் மூலம் அனுப்பி விடுவார்கள் என்று நினைத்துக்கொண்டு நீ போய்விட்டால், அப்பால், "அப்பால்" தான். உன்வேலை பாதி பாதிதான். நீ வீணுக்கு எதிர்பார்த்து ஏமாற வேண்டியதே. மறுபடியும் நீ வந்து 'குந்தி' ஆகவேண்டியதாய்த்தான் வரும்.

ஃ

உன் வீட்டுக்குள் புதிதாக வந்தவர் உனக்கு வேண்டியபடி தாளம் போட்டால், நீ ஏதோ அவருக்குக் கொஞ்சம் மேளம் கொட்ட வேண்டிய சங்கதி இருக்கிறதென்று தெரிந்துகொள். சும்மா சும்மா உன்னை நல்ல மனிதன் என்று ஒரு நாளும் சொல்ல மாட்டார்கள். எல்லாம் தன் காரியத்துக்குத்தான். நீ அவர்கள் மனப்படி நடந்து கொள்கிற—செய்கிற வரையில்தான் "நல்ல மனிதன்" எனப்படுவாய். பிறகோ—?

ஃ

போட்டிக்கார மனிதன் என்றைக்கும் போட்டி செய்வானென்று எண்ணி விடாதே. அதில் அவனுக்கே நஷ்டமிருக்கிறதை அவனே அறிவான். அறிந்து கைகடிக்கிற காலத்திலே உன்னைப்போலவே அவனும் கிரமமான விலைக்கு விற்க வந்து விடுவான். ஆனதால் அவன் விலையைக் குறைத்தான் என்று நீயும் விலை குறைக்காதே. என் விலை இதுதான். எப்போதும் நான் சுத்தமான நெய்யில் தான் தயாரிப்பவன் என்று நீ ஒரு கண்டிப்பிலேயே நில். உன் கடையிலும் வியாபாரம் நடக்கும்படியே ஆண்டவன் செய்வார். போட்டிக்காரன் மேல் துவேஷம் கொள்வதற்குப் பதிலாக, அந்த சமயம் ஆண்டவனை அதிகமாக நினை. உன் குறைவுகளை அந்தக் கருணாநிதியிடம் முறையிட்டுக்கொள். அவர் காப்பார். போட்டி நெடுநாள் நிலைக்காது.

ஃ

உறவு சுற்றம் வேண்டியதே. வர-போக—இருக்கவேண்டியதே. ஆனால், நெடுநாளைக்கு வந்து குந்திக்கொள்ளும் சங்கதியில் நீ எச்சரிக்கை பெறு. அவர்களும் உன்னபடி வேலை யிருந்து அதற்கென்று தங்கினால் அதனால் அவர்களின் குடும்பம் பிழைக்கு மாத

---

சிலரது அற்பத் தன்மையானது அவர்களுடைய மனப்போக்கை விசாலமடையாமற் செய்துவிடுவதால், வெளிக்கு எவ்வளவு பெரிய மனிதர்களாய்த் தோற்றினும் பலராலும் அந்தரங்கத்தில் வெறுக்கப்படுகிறார்கள்.

லின் மிக்க அன்புடனே பார். அவர்கள் வந்த ஜீவனார்த்த காரியம் இனிது முடித்துக்கொண்டு போகும்படி வேண்டிய உதவிகளெல்லாம் செய். அது கடவுளுக்குப் பிரீதி. இவ்விதம் நோக்கம் எதுவும் இல்லாமல் உன் கஷ்டத்தில் உட்கார்ந்து உன்ன வெட்டிக்கு வந்திருப்பதாகக் கண்டால், இட்டு இட்டுப்பிறகு சத்துராதி யாவரைவிட, இப்போதே நல்ல வார்த்தைகள் சொல்லி அனுப்பி விட்டு நாலுகிட்டுகள் நீ பட்டுக்கொண்டு அம்மட்டில் கெட்டவனுவதே மேல். எப்போதும் காசு தந்தால் அதற்கு ஒரு கணக்கு. மற்ற மற்ற பதார்த்தங்களாகக் கொடுத்தாலோ அதற்குப் பேருமில்லை மண்ணுமில்லை.

ஃ

வீட்டில் குடி வைப்பதில் ஜாக்கிரதை! முதலில் பாம ஏழை போலத்தான் காட்டுவான். ஒரே ஒரு சாண் இடம் தந்தாலும் போது மென்பான். வெகுநாம் உனக்கு உட்பட்டு நடப்பான். உனக்கு வேண்டிய வேலையெல்லாம் செய்வான். தானே உனக்கு வெகு நம்பிக்கையுள்ள மனிதனுகக் காட்டிக்கொள்வான். உன் வீட்டில் ஒண்ட இடம் கிடைத்த பிறகு கொஞ்சம் கால் நீட்ட இடம் பார்ப்பான். அதன்மேல் உடம்பை நீட்டிப் படுக்க வழி பார்ப்பான். நீ எந்த வேலைக்கும் அவன் கையையே எதிர் பார்க்கும்படியும் செய்து கொள்வான். பிறகு உன் வீட்டிற்கு அவனே முதலாளியாகி விடுவான். வாடகையும் வராது. கேட்டாலோ கோர்ட்டுக்குப்போ என்பான். வெகு அலக்ஷியமாகி விடுவான். உன் வீடு அவன் வீடு போலாகிவிடும். இத்தகைய நய வஞ்சக சண்டாள நாசகால மோசத்துரோகியை எவ்வளவு செலவு செய்தாயினும், நீதிஸ்தலத்தில் வழக்கிட்டாகிலும் வீட்டை விட்டுத் தூரத்தும் வேலையை உன்னுடைய முதல் வேலையாகக் கொள். இவ்வித வஞ்சகர்களின் வாழ்வு பின்னுக்கு யானை உண்ட விளாங்கனிதான். வீட்டை வாடகைக்கு விடுவதில் சரியான பத்திரமும் கையுமாக சர்வ ஜாக்கிரதையோடு இரு.

ஃ

கடன் தந்தவனையே அதிகாரம் செய்து குதிரை ஏறப்பார்க்கும் கடன்காரனை இலகுவில் விடக்கூடாது. அவன் எவ்வளவு அலக்ஷியமான வார்த்தைகளெல்லாம் கொட்டுகிறான் பார்த்தாயா? என்ன செலவு ஆனாலும் நீதி ஸ்தலத்தில் வழக்கெடுத்து அவன் கொட்டத்தை யடக்கவேண்டியதே அவனுக்குக் கற்பிக்கும் நல்ல படிப்பினை. இப்போது துள்ளுகிறதெல்லாம் பின் அடங்கும்படியாக நீ சாக்தத்தோடும் செய். அக்கிரமத்தை நெடுநாளைக்கு ஈசன் சகியார். இந்த நாளில் இன்றைக்குச் செய்த தீங்கு நாளைக்கே வந்து சூழ்ந்து கொள்கிறது!

ஃ

எவ்வளவு பெரிய வாழ்வு வாழ்ந்தாலென்ன? வெளியில் பல பிரசித்திகள் சுமந்தா லென்ன! ஆதி நாளையிலிருந்த அந்த அல்ப குணம் மாறவில்லையே! நூறுகாசு நம்பிக்கொடுத்துப் பின் வாங்குவோம் என்று எண்ண முடியவில்லையே! இன்று பேசிப்

---

ஏதம்மா நீ ஒரு நினைத்தனை. நினைத்த ஒருதக்கு நீ என்ன வாழ்வுகண்டாய்? ஒரு காலத்தில் பிரியம்; மற்றொரு காலத்தில் அன்னியத்தன்மை; இது மிருகங்களிடங்கூடக் கண்டிடுவோம். ஆனல், மானிடரிடம்தான் தென்படுகிறது.

பணம் தந்து அடுத்த வாரம் பாக்கித் தொகை தருவதாய்ச் சொல்லும் வியாபார வார்த்தை அந்தப்படி நடக்கக் காணோமே! பணம் ஏது, பாக்கி ஏது, அப்போதே தீர்ந்து விட்டதே என்றல்லவோ பிறகு பேச்சுகள் தொடங்கிக் கொள்கிறது! இல்லாவிடில் நாளைவா, நாளைவா என்று ஆறுமாதம் அலையவைப்பதில் ஆரம்பித்து விடுகிறார்கள். வீட்டுக்குள்ளேயே இருந்துகொண்டு 'இல்லை' யென்று தெரிவித்து விடுகிறார்கள். பலவந்தமாய் உள்ளே நுழைந்து கண்டு பிடித்து விட்டாலோ- மூன்று நாளில் எல்லாக் கடனும் தீர்த்துவிடுவதாய்ச்சொல்லி அனுப்புகிறார்கள். நாணயம் தடுமாறிய வாழ்வும் ஒரு வாழ்வா? இந்த அழகில் கும்பிடு போடுவதும் வேறேயா? பெரிய கட்டைகளென்று மயங்காதே. உன்னுக்கு அது உதவாக் கட்டைகளாக இருக்கும். அதிலும் புதிதாய்ப் பெரிய மனிதரான கட்டைகளோ வெகு கஷ்டப்பட்டுத்தான் நல்லது பொல்லாதது என்று சொல்லும் படியாக அவ்வளவு மோசமாயிருக்கும். எச்சரிக்கை!

## மிஸ்டர் டமாரவாயன்.

டமாரம் கொட்டினால் எங்கும் அதன் சப்தம் கேட்பதுபோல், இந்த டமார வாய் உள்ளவர்களிடம் ஒரு சங்கதியைத் தெரிவித்துவிட்டால் போதும்! உடனே ஊர்முழுதும் பரவிவிடும்! வீட்டுக்கு வந்தவர்கள் போகிறவர்கள் எல்லோருடைய செவியிலும் டமாரவாயன் தான் கேட்ட சங்கதிகளை ஏற்றிப் பறையறைந்துவிடுவான்! பாவம்! டமாரவாயன்மேல் தப்பில்லை! அவன் வாயில் எந்த சங்கதியும் நிற்கிறதில்லை! தான் அறிந்த சங்கதியை உடனே வெளியிற் சொல்லிவிட்டால்தான் அவனுக்கும் அதில் ஒரு திருப்தி ஏற்படுகிறது! ரகசியமாக ஒரு காரியம் பேசவோ செய்யவோ வேண்டியிருந்தால் மகாகனம் பொருந்திய டமாரவாயனைப் பக்கத்தில் வைத்துக்கொண்டால் போதும்!

ஒரு சாமானின் விலை நான்கு அணவாக இருந்தால் ஐந்தணா என்று கூறி ஒரு அணாவைத் தாங்கள் எடுத்துக்கொண்டு நாம் தந்த எட்டணாவில் மிச்சமான மூன்று அணாவை நம்மிடம் கொடுக்க வருகிறார்கள். பிறகு இந்த ஒரு அணாவை அவர் தந்தார்—இவர் தந்தார் என்று சொல்வதுண்டு. இதன் உண்மையும் அவர்களின் மோசமும் நமக்குத் தெரிந்திருப்பினும் அதைக் கேட்பதில் எவ்விதலாபமுமில்லை. கேட்பதால் தன்னைச் சந்தேகிக்கிறார்களென்றும், தான் செய்த மோசத்தை யறிந்துவிட்டார்களென்றும் அவர்கள் தெரிந்துகொண்டு விடுவார்கள். அந்த ஆத்திரத்தில் நமக்குக் கெடுதியும் செய்யலாம். நாம் அவர்களை நம்பி நஷ்டப்பட்டதுடன் போகாமல் அவர்களின் பகையும் எதற்காக? மௌனமே சரி. இனி ஒரு காசுக்கும் நம்பாதிருக்க இதிலிருந்து எச்சரிக்கை பெறுவதே மேல்.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# அதிகப்பட்ட ஒரு நாளின் ஆட்டம்!



என்ன அதிகப்பட்டுப் போயிற்று?—எது மிஞ்சிக்கோணி விட்டது?—யார் பெருத்து உப்பிப் போனது?—எவரெவர் அதிகப்பட்ட பெரிய மனிதர்களாய்ப் போனார்கள்? எங்கெங்கே நாலு நாள் வாழ்வு அதிகம் கூடிக்கொண்டு துள்ளிப்போனது?—எத்தெந்த வீட்டுக்குள் எவரெவர் அதிகப்பட்டு மீறி விட்டது?—என்னென்ன சங்கதிகள் அதிகப்பட்டுப் போயினது? மருமியின் கையும்-வாயும்—துடுக்கும் அதிகப்பட்டு விட்டதா? மாமிக்கும் மருமகனுக்கும் ஏதாவது சரஸ சங்கதிகள் அதிகப்பட்டு விட்டதா:—பார்ப்பதற்கு வந்ததுபோல் வீட்டுக்குள் அடிவைத்த நாய்க்கு அடுப்பங்கரை வரையில், பேச்சு—ஜாடை—கண்ணடி-மயக்கு அதிகப்பட்டு விட்டதா?—ஒருவனுடைய மனைவியை அந்தரங்கமாய் இச்சித்து விட்டு, வேறு சங்கதிக்காக வந்ததுபோல் அவளையும் கண்டுபோக வருகிற குள்ளநரித்தனங்கள் அதிகப்பட்டு விட்டதா?—அத்தை மகன், மாமன் மகன், அக்காள் தங்கச்சி மகன் இந்த இடங்களில் ஏதாவது எல்லை மீறி அதிகப்பட்டு விட்டதா? பிரபல வியாபாரிகளிடம் படுமோசங்கள் அதிகப்பட்டு விட்டதா? பெருத்த உத்தியோகஸ்தர்களிடம் லஞ்சக்கை அதிகப்பட்டு விட்டதா?—சைக்கிள் பேர்வழி மோட்டார் மனிதராய் அதிகப்பட்டு விட்டாரா? அல்ல, அல்ல. விகடன் இந்த அதிகப்பட்டு விட்டவைகளை யெல்லாம் இப்போது பேச வரவில்லை. விகடன் இந்த தடவைக்கு எடுத்துக்கொண்டது வேறொரு சங்கதி. அது அதிகப்பட்டு விட்ட ஒரு நாளின் ஆட்ட சங்கதி. அது என்ன என்றாலோ கேளுங்கள்!

வந்த விருந்தினர் சில நாளிருந்து புறப்படுகிறார்கள்; அந்த சில நாட்களுக்குள் அவர்களுடன் மனது பழகிப்போய், ஒருவித அன்பும் கூடிக்கொண்டு விடுவதால், அவர்கள் இப்பொழுது புறப்பட்டுப் போவதில் வீடு காலியாகி விடுவதைக் கண்டு மனம் தாளாமல், அவர்களையும் விட்டுப்பிரிய இஷ்டம் இல்லாமல், இன்னும் ஒரு நாள் இருந்து நாளைக்குப் போகலாமென்கிறான்! மிகவும் வேண்டிக் கெஞ்சுகிறான்! அவர்களும் அவ்விதமே இசைந்து இருந்து கொண்டு விட, இந்த அதிகப்பட்ட ஒரு நாளாவது இவனுக்கு எவ்வளவோ சந்தோஷத்தைக் கொடுக்கிறது! வீட்டுக்குள் வந்தோருக்கும் ஒரு விசுவாசத்தை எழுப்பி அதிக உறவுகொள்ள வைக்

கிறது! அந்த அதிகப்பட்ட ஒரு நாளில் நல்ல விருந்துகளும் நடக்கின்றன! இப்படியே ஒருவன் மூன்று மாதமாய் ஒருவர் வீட்டில் தங்கித்தன் வேலைகளைக் கவனித்து விட்டுப் புறப்படுகையில், இன்னொரு நாளும் இருந்து போகும்படி வீட்டுக்காரர்கள் வேண்டிக்கொள்ளும்போது இவனுக்கும் அந்த ஒருநாள் இதுவரையிலிருந்த மூன்று மாதத்தின் நாட்களை விட அதிக சந்தோஷத்தைக் கொடுப்பதாகிறது!

ஃ

வெளியூருக்குப் புறப்பட ஒரு நாள் நிச்சயித்துவிட்டு, அந்த நாள் நெருங்கியதும் வீட்டையும் மனைவி மக்களையும் விட்டுப்போக மனமில்லாமல் நாளைக்குப் புறப்படலாமென்று ஒரு தினத்தைத்தள்ளி வைத்து விடுகிறான்! இதில் அந்தத் தினமுழுதும் தன் வீட்டாருடன் எவ்வளவோ ஆனந்தமாய்க் கூடிக்கொண்டு குதுகலப் படுகிறான்! சனி, ஞாயிறுடன் திங்கட்கிழமையும் ஒரு விடுமுறை நாளாக அதிகப்பட்டு விட்டால்! உத்தியோகஸ்தர்களுக்கும் மாணவர்களுக்கும் கனத்த சந்தோஷமாய் விடுகிறது! இவ்விதம் மூன்று நாள் கொண்டாட்டமாய்க் கூடிக் கொள்கிற விடுமுறைகளும் பண்டிகை விரதங்களும் சில உண்டு! தீபாவளியில்—ஸ்நானம்—பண்டிகை அமாவாசை நோன்பு ஆக மூன்றுநாள்! தசமி—ஏகாதசி—துவாதசியாக வைகுண்ட ஏகாதசி மூன்றுநாள்! கல்யாணம் மூன்று நாள்! சாந்தி யறையின் வைபவ ஜோடிப்பும், தினம் ஒவ்வொரு தினுசு பலகாரங்களாய்ப் பாலுடனே அடுத்தடுத்து வைப்பதும் மூன்றுநாள்! அந்த மூன்று நாளைக்குப் பிறகு பாலுக்குப் பதில் ஒரு லோட்டா ஜலம்தான் வீட்டு அறைக்குள்ளே போகுமாம்! இவ்விதம் அதிகப்பட்டுவிட்ட தினத்தின் ஆட்டமும் பூரிப்பும் வெகு நாளைக்கு மறக்க முடியாததாய் விடுகின்றது!

ஃ

மனைவியைப் பார்க்கும் எண்ணத்துடன் மாமி வீட்டிற்குச் சென்று நன்றாகக் குந்திக்கொண்டு கவலையில்லாச் சாப்பாடாகக் கொழுக்கவுண்டு விட்டுப் புறப்படுகிறபோது, இன்னும் அதிகமாய் ஒருநாள் இருக்க ஆசை மிஞ்சிப்போய், அந்த அதிகப்பட்ட நாளில் பெண்ணும் மாப்பிள்ளையும் எவ்வளவோ கொஞ்சி மிஞ்சிப் பூரிப்பிலே துள்ளுகிறார்கள்! வீட்டுக்குள்ளே நெய்யில் சுடுகிற வாசனைகளெல்லாம் மூக்கைத் துளைத்துக் கொண்டு போகிறது! இன்று பிரயாணப்பட எவ்வளவோ முயன்றும் முடியாமற் போய்விட, நாளை புறப்படலா மென்பதில், அந்த அதிகப்பட்ட ஒரு நாளானது எவ்வளவோ சௌகரியத்தைத் தருவதாயிருக்கிறது!

ஃ

நாளைக்கு விவாகம்—நாளைக்கு சாந்தி—நாளைக்கு மனைவி ஊரி விருந்தும் வருவாள்—நாளைக்கு சம்பளம் தரும் நாள்—நாளைக்குத்தான் எதிர்பார்க்கும் பணம் வரும் நாள்—நாளை தன் காதலியைச் சந்திக்கும் நாள்—புருஷன் வீட்டிற்குப் போன அக்கா தங்கை நாளை வரும் நாள்—நாளைக்குப் பண்டிகை, நோன்பு, கோயில் திருவிழா நாள்—நாளைக்குப் பள்ளிக்கூடம் வெயில் காலத்திற்கு

---

"குழந்தாய்! என் குலக்கொழுந்தே! அழாய் நீ" என்று தேறுதல் கூறியவரெல்லாம் இன்று எங்கொளித்தனரோ? அது ஒருகாலம்! இது ஒருகாலம்!

மூடும் நாள்—என்னும்போது அந்த நாள் வருவதற்குத் தடையாக இன்றைக்கு அதிகப்பட்டு நிற்கும் நாளை எப்பொழுது இந்த ஒரு நாள் போகுமோ, எப்போது பொழுது விடிந்து நாளை நாள் வருமோ என்பதாகப் பெரிய ஆவலாதிகள் கொள்கிறார்கள்!

ஃ

இன்றைக்குப் பணம் வரவில்லை, நாளைக்குத் தந்து விடுகிறேனென்பதில், அதிகப்பட்ட ஒருநாள் பணம் கேட்க வந்தவனுக்கு வருத்தத்தை உண்டு பண்ணாமல் ஒருவித சமாதானத்துடன் போகும்படி செய்விக்கிறது! இன்று மேல் சரஸத்துடன் இருந்து விட்ட இடத்தில் நாளைக்கு வருகிற அதிகப்பட்ட நாள் ஒருவருக்கொருவர் வசப்பட்டு மயங்கிப் போகும்படி செய்து விடுகிறது! இன்று வந்த விருந்தாளி நாளைக்கும் இருந்து கொள்வாரானால் அந்த அதிகப்பட்ட நாளில் தன் பெண்ணைத் தரச் சம்மதிக்கவோ—கடனாகப் பணம் தரும் சங்கதிக்கோ இசைந்து இணங்கிப்போய் விடுகிறார்! நாளைக்கும் நான் இங்கேயிருந்து தான் புறப்படுவேன் என்று தன் ஆருயிர் நண்பன் சொல்லும்போது அவனுக்கு ஆனந்தம் துள்ளிப்போகிறது! நாளைக்கு வாருங்கள்—வேலை கொடுக்கிறேன் என்னும்போது அந்த நாள் ஒரு பெரிய சந்தோஷ நாளாகி விடுகிறது! நாளைக்கும் சந்திக்க வருகிறேன் என்று சொல்லும் பொழுது, அந்த அதிகப்பட்ட தினம் அதிகமான அன்பைப் பெருக்கி விடுகிறது! இன்றைக்குக் கோர்ட்டுக்குப்போய்க் காத்திருந்து நாளைக்குத் தீர்ப்பு சொல்லப்படுமென்று தெரிகிறபோது அந்த அதிகப்பட்ட தினத்தை இருபக்கத்துக் கக்ஷிக்காரர்களும் வெகு கவலையோடு எதிர்பார்க்கிறார்கள்!

ஃ

நாளையொருநாள்தான். உப்பில்லாப் பத்தியம் என்னும்போது இன்றுள்ள அதிகப்பட்ட நாளை அது எப்போது தொலையுமோ என்று சபிக்கிறார்கள்! அதிகப்பட்ட ஒருநாள் அவநம்பிக்கையையும் கொடுக்கிறது! நாணயமற்றவன், சொன்ன சொல் தவறுகிறவன் என்கிற பெயரையும் வாங்கவைக்கிறது! அதிர்ப்திபட்டுப் போகவும் செய்கிறது! அதிகப்பட்டு ஒருநாளைக் குறிப்பிடுவதால் இன்று வந்து அலைந்தது வீணாகும்படியும் செய்கிறது! நாளைக்கு இவனுக்குக் கடிதம் வருவது நிச்சயமாயிருக்க, இவன் எதிர்பார்க்குமிடத்தில் அவனும் அந்த வேளைக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருக்க, மனுஷ்யசக்தியில் இதை அறியமுடியாததால் ஒரு அதிகப்பட்டநாளைப் பொறுத்துக்கொள்ள மாட்டாமல் இன்றைக்கே அவனுக்குக் கடிதம் எழுதிப்போடுகிறான்! இந்தக் கடிதம் அவனிடம் சேரும்போது, அவன் கடிதம் மறுநாள் இவனிடம் வருகிறது! அடடா! நேற்றுத் தானே அவனுக்குக் கடிதம் எழுதினேன் என்கிறான்!

ஃ

இன்றைக்கு ரயிலுக்குக் காப்பி பலகாரம் கொண்டுவா என்று ஒருவர் எழுதிவிட, அதை நம்பி ரயிலுக்குச்

---

சிலரது காரியங்களை நோக்கிடில், அவர்களைப்போன்ற முதிர்ந்த அறிவுள்ளவர்களுக்கு இருக்கவேண்டிய திடபுத்தி அவர்களுக்கு இருந்து வருவதைக்காட்டுவதாக இருக்கவில்லை. அவர்களின் அறிவு மிகக் கேவலமான தன்மையிலேயே செல்கின்றது.

சென்று பலகாரங்களுடன் காத்து நின்று குறித்த மனிதர் வாமல் வெறுப்புடன் திரும்புவதில், வீட்டுக்கு வந்ததும் நாளை வருவதாய் எழுதியுள்ள அவர் கடிதத்தைப் பார்க்கும்படியாகிறது. அந்த அதிகப்பட்ட ஒருநாள் எவ்வளவோ சலிப்பைக் கொடுத்து, இனி நாளைக்குக்கூடவா காபி பலகாரங்களைச் சுமந்து ரயிலுக்குப் போகவேண்டும்; ரயில் வழியிலேயே ஏதேனும் வாங்கித்தின்று தொப்பையை நிறைத்துக் கொள்கிறதுதானே, இதென்ன கஷ்டம் என்று குறைப்பட்டுக்கொள்ளும்படியும் செய்கிறது!

ஃ

ஒரு சங்கதியில் இருவருக்கும் தகராறு ஏற்படும்பொழுது அது பாதி வரையில் பேசப்பட்டுத் தீர்ந்து நாளைக்கு ஒரு முடிவுக்கு வருவோமென்னும்போது, நாளைவரையிலென்ன, இன்றே ஒரு முடிவுபடுத்தி விடுங்களென்று அதிகப்பட்ட அந்த ஒரு தினத்தை வெகு வெறுப்போடும் நினைக்கிறுன்! நாளை வருகிற அமாவாசை பௌர்ணமிக்குள் முடிந்துவிடும் என்று ஒரு நோயாளியைப் பார்த்து வைத்தியர் சொல்லும்பொழுது, அந்த அதிகப்பட்ட தினத்தை எவ்வளவு பயங்கரமாய் வீட்டார் எதிர்பார்க்கிறார்களோ! அதிகப்பட்டுவிட்ட அந்த ஒருநாள் செய்யும் அவதிகள் கொஞ்சமா? அது நன்மையையும் செய்கிறது! துக்கத்தையும் தந்து அலறவும் வைக்கிறது! ஒரே ஒரு நாளானுலும் அது செய்துவிடும் ஆட்டபாட்டங்களும், கூத்துகளும், கோரணிகளும் இந்த விகடனின் ஒரு வாயாற் சொல்லக்கூடவில்லையே!

ஃ

இன்று பிரியமாய்ப்பேசிய வாயும் பரஸ்பரம் பார்த்துக்கொண்ட கண்களும், மனமொத்துப்போன வகைகளும், அன்பாய் நடந்துகொண்ட மாதிரிகளும் நாளைக்கு வருகிற அதிகப்பட்ட தினத்தில் இன்னும் முற்றிபிந்திய பெரிய மாளிகைக்குக் கனத்த அஸ்திவாரம் போட்டதுபோலாய் விடுகிறது! இன்று தொடங்கிய மனஸ்தாபமும் கலகமும் நாளைய தினத்தில்தான் அதிகப்பட்டுக்காட்டி ஜென்ம விரோதிகளாகச் செய்கிறது!

ஃ

இன்று துக்கப்பட்ட நாளாயினும் நாளைக்கு வருகிறநாள் அந்தத் துக்கத்தை “அவ்வளவுதான் பிராப்தம்” என்று தணித்துக்கொள்ளச் செய்கிறது! இன்றைய ஆத்திர கோபங்கள் நாளைக்குவரும் புது தினத்தில் ஆறி சாதாரணப்பட்டு விடுகிறது! இன்றைக்கு ஆரவாரமாய்ப் பெருமகிழ்ச்சியாயிருந்த பூரிப்பானது நாளையதினம் சகஜமாய் விடுகிறது! சாதாரணமாகிப் போகிறது! அது ஒரு அருமையாகவும் தோற்றுவதில்லை! இவ்விதமாக அதிகப்பட்ட ஒருநாள் எவ்வளவோ காரியங்களைச் செய்து விடுகிறது! ஆவலோடும் எதிர்கொண்டழைத்த மனிதர் ஒருநாள் அதிகப்பட்டுத் தங்கினுல் பலருக்கும் சலிப்பேற்பட்டுப்போவதும் உண்டு தானே!

ஃ

---

ஒருவன் தன் மனைவியை அன்புடன் ஆதரிப்பவனுயிருக்கிறுன். ஆனுல், அவன் மாமிஸபக்ஷணி என்று வைதிகம் வெறுக்கின்றது. மற்றொருவனே மாமிஸபக்ஷணியல்லன்; அவனே தன் மனைவியைக் கொலை—கொடுமை செய்வோனுகவும், வரதக்ஷிணை, சாந்திமுகூர்த்ததக்ஷிணை என்று பல ஆயிரத்துக்குத் தொகை கேட்போனுகவும் இருக்கிறுன். இதில் உத்தமன் எவன்?

ஒரு வருஷத்திலே அதிகப்பட்ட நாளாக மற்றொன்று இருக்கிறது. அது நாலு வருஷத்திற்கு ஒருமுறை வருகிற "லீப் இயர்" தான். அதில் பிப்பிரவரி மாதத்திற்கு 29-நாட்கள் ஏற்படுகிறது. 28-க்குப் பதிலாக 29-ஆகி இவ்விதம் அதிகப்படுகிற ஒரு தினத்தால் எவ்வளவோ நன்மையும் தீமையும் ஏற்படுவதாக இருக்கின்றது! இந்த 1932-ம் வருஷம் லீப் இயரான (Leap Year) ஒரு அதிதின வருடமாகும். இந்த வருடம் பிப்பிரவரிமாதம் 29-ம் தேதி பிறந்தவர்களெல்லாம் தாங்கள் பிறந்த தினமான பிப்பிரவரி மாதம் 29-ம் தேதியை அடுத்த வருஷத்தில் காணமுடிகிறதில்லை! அதற்கு 4-வருஷங்கள் பொறுத்தே கண்டு தாங்கள் பிறந்த நாளைக்கொண்டாடவேண்டி வருகிறது! இந்த அதிகப்பட்ட ஒருதினம் இவர்களுக்கு ஒரு தொல்லையாக முடிகிறதல்லவா? இது இப்படியானால், வருஷ—மாத சம்பளமாக உள்ள உத்தியோகஸ்தர்களோ வருஷத்தில் 365—நாள் வேலை செய்வதற்குப் பதிலாக, கூட ஒரு அதிகப்பட்ட நாளைக்கும் சம்பளமில்லாமல் உழைக்கவேண்டி வருகிறது! தினக்கூலியும் வாரக்கூலியும் வாங்குகிறவர்கள் பிப்பரவரி 29-ம் தேதியான அதிகப்பட்ட ஒரு தினத்துக்கும் கூலி பெற்று லாபமடைகிறார்கள்! அப்படியே இந்த வருஷத்தின் கடைசி தினத்தில் வர்த்தகர்களும் ஷாப்புக்காரர்களும் தங்கள் கணக்குகளைப் பார்க்கும்போது போன வருஷத்தைவிட அதிக லாபம் அடைந்திருப்பதற்கு இந்தப் பிப்பிரவரியின் அதிகப்பட்ட ஒரு நாள் காரணமென்பதை அறிந்து கொள்வார்கள்! இந்த அதிக ஒரு தினத்தால் எவ்வளவோ தபால் கார்டு கவர்கள் விற்று அதிக லாபம் ஏற்பட்டிருக்கும்! இவ்விதமே ரயிலிலும் ஒரு தினத்து அதிக வருமானம் கூடியிருக்கலாம்! பாங்கிகளில் மொத்தப்பணம் கட்டியுள்ளவர்கள் தங்களது ஒருநாளைய வட்டியை யிழக்க, பாங்கிக்காரரோ ஒரு தினலாபத்தை யடைகிறார்கள்! இன்னும் இந்த அதிதின வருடமானது சாதாரண வருஷங்களைவிட, அந்த அதிக ஒரு நாளில் ஜனவிருத்தியை அதிகரிக்க, மற்றொரு பக்கம் ஏனைய வருஷங்களைவிட அதிக மரணப்புள்ளியைக் காட்டுவதாக இருக்கிறது! தினசரிப் பத்திரிகைக்காரர்கள் கூட ஒரு அதிக தினத்துக்கும் பத்திரிகை யனுப்ப வேண்டியவர்களாகிறார்கள்! "சிறு மழை தூறல் பெருவெள்ளம்" என்பது போலச் சின்னஞ் சிறு காரியங்களெல்லாம் எவ்வளவோ பெருங் காரியங்களைச் செய்துவிடுகிறது! அப்படியாக, இந்த அதிகப்பட்ட ஒரு தினத்துக் கோமாளித்தனங்களும் கோரணிகளும் இன்னும் சொல்லச் சொல்ல வெகு நீட்ட நீட்டமாய்ப் போகக்கூடுமானதால், விகடன் இவ்வளவுடன் போதுமென்று முற்றுப் புள்ளி போட்டு விடுகிறேன்! ராம்! ராம்! சுபம்! ஞு!! சுவாஹா!!!

---

துக்கமும், பரிபூரணமற்ற தன்மையும் நிறைந்த இம் மண்ணுலகில் நதிகளே மிக்கப் பரிபூரணமான தன்மை வாய்ந்தவை. அவை உற்பத்தியான இடத்துக்கும், கடைசியில் போய்ச்சேரும் கடலுக்கும் எவ்வளவோ தூரமிருப்பினும், இவ்வளவு தூரத்துக்கும் ஒரே வெள்ளமாய்ப் பிரவகித்து ஸமுத்திரத்தில் கலக்கும் அதன் பெருமையும் ஆற்றலும் பரிபூரணமுந்தான் என்னே!

சிலாது வாக்குறுதிகள் ஆழமற்றதாகவும் வெறும் பகட்டாகவும் இருக்கின்றன.



எல்லாம் நாற்றம்தான், எல்லாம் அசங்கிதம்தான், அசங்கிதமில்லாதது எது என்று விகட சித்தர் வினவுகிறார்!

ஃ

ஒருபக்கம் துக்கமும், இன்னொரு பக்கம் சந்தோஷமுமாய்—இப்படித்தான் நடுவில் கொண்டாட்டம் என்பது வந்து விளையாடிவிட்டுப் போகுமாம்!

ஃ

பெரிய பக்தர்களாகச் சிலர் காட்டுவதெல்லாம் தாங்கள் எடுக்கும் பிச்சையில் அரிசி அதிகமாகக் கிடைக்க வேண்டுமென்பதற்குத்தானும்! அதற்காகவே தனிப்பட்ட சிங்காரங்களாம்!

ஃ

சிலர் தங்களை மொட்டையடித்துக்கொள்வது தங்களுக்கு அதிகமான பக்தி ஞான வைராக்கியம் ஏறிவிட்டதென்பதைக் காட்டுகிறதற்காகவாம்!

ஃ

அடியோடு கெடுத்துவிடப் பார்த்து அதற்கு வேண்டியதெல்லாம் செய்தவன் அது நிறைவேறாமற் போனதும், பற்களைக்காட்டி உறவாட வருவானும்!

ஃ

என்னைப்பற்றி என் வைதாய் என்றதற்கு, உன்னைப்பற்றியதாய் ஏன் நினைத்துக்கொண்டாய் என்று ஒருவன் திருப்பிக் கேட்டானும்!

ஃ

எவரையும் தனக்குத்தெரியுமென்பவன் கடைசியில் பக்கா ஏமாற்றுப் புள்ளியா யிருப்பானும்!

ஃ

நேசம் முற்றுவதற்குள் பகை—விரோதம்தான் அதிகம் முற்றுகிறதாம்!

ஃ

அவனை இளிச்சவாயன் என்று இலவசத்தில் பறிக்க நினைத்ததில், அவன் விழித்த அண்ணாத்தையா யிருக்கிறானும்!

ஃ

வீணுக்குப் பெருமைப்பட்டுக் கொள்பவர்களை யெல்லாம் சிறு துரும்புக்குச் சமமாய் அலக்ஷியம் செய்ய வேண்டுமாம்!

ஃ

மனதுக்குப் பிடிக்காதவர்கள் வாங்கிவந்த மாம்பழம் புளிப்பாய்த் தோற்றுமாம்!

ஃ

தான் போடுகிற கும்புடு—பல்லிளிப்பிலேயே 'உனக்கு நான் ஏமாந்தவனல்ல' என்று காட்டிக்கொள்ள வேண்டுமாம்!

ஃ

ஒருவன் செய்யும் துரோகத்துக்கு அவனுக்கு முன்னால் நன்றாக வாழ்ந்து காட்டவேண்டுமாம்!

ஃ

எவன் விசுவாசத் துரோகியோ அவனை இனி புசிப்புக்கு அழைக்காமலே வாயளவில் குலாவிவிட வேணுமாம்!

ஃ

நல்ல செலவுகள் செய்யவேண்டிய இடத்தில் செய்யத் தவறுகிறபோதுதான் பாழுஞ் செலவுகள் பல முட்டிக்கொள்ளுமாம்!

ஃ

வீட்டுச் செலவுகள் குறைவதற்குக் காப்பி பலகாரங்களும், சில விருந்தினர்களும் அதிகமாக வேண்டுமாம்!

ஃ

பத்து குழந்தைகளானாலும் அழாதபடி வைத்துச் சமாளிக்கிற சக்தி பெண்களுக்குத்தானும்!

ஃ

சில உபாத்திச்சி அம்மையார்களுக்குள் கற்பு வெகு மோசமாம்! வாய்த்தனம் மட்டும் அதிகமாம்!

# சென்றமாதம்

**காலஞ்சென்ற ஸ்ரீ S. பவானந்தம் பிள்ளை:**—இவர் சென்னையில் போலீஸ் டிப்டி கமிஷனராக விளங்கியவர். பல தமிழ் நூல்களைப் புது முறையில் வெளியிட்டவர். உயரிய உத்தியோக பதவியிலுள்ளோர் தாய்ப் பாஷைக்கு உழைக்கப் புகின் அதற்கு எவ்வளவு செல்வாக்கு கிடைக்குமென்பதற்கு ஒரு உதாரணமாக நின்றவர் இவர் விவாக மில்லாமலே இருந்து விட்டது பெரும் வியப்பு.

ஃ

**ஸ்ரீ விபின சந்திர பாலரின் மரணம்:**—பழய தேச பக்தர்கள் இவரது மரணத்திற்குக் கண்ணீர் விடுவர். ஸ்ரீ பாலர் பழய பெருந்தலைவர்களில் ஒருவர். பிறகு இவரது உள்ளம் மாறிவிடினும், அவர் அன்று போட்ட தேசிய அஸ்திவாரத்தை அவராலேயே அழிக்க முடியவில்லை. ஸ்ரீ பாலரைப் பழய இந்தியா என்றும் மறவாது.

ஃ

**ஸ்ரீ ஜெ. எஸ். கண்ணப்பரின் திருமணம்:**—சென்னை "இந்தியா" பத்திரிகையின் ஆசிரியரான இவர் தாம் ஹிந்துவாக இருந்தும் ஒரு கிறிஸ்தவப் பெண்மணியை கிறிஸ்தவ மத ஆசாரங்களின்படி மணந்து கொண்டமை அதிசயமே. இவர் இப்பொழுது ஹிந்துவா, கிறிஸ்தவரா என்பது வினா? அதிகம் படித்தோரின் போக்கு ஒரு உறுதியாய், ஒரு நிச்சயமாய்ச் சொல்ல முடியவில்லை.

ஃ

**ஒரு பெண்ணின் துயரம்:**—"கட்டிய தாலியையும் அறுத்துக்கொண்டார். அணிந்திருந்த ஆபரணங்களையும் பிடுங்கிக்கொண்டார். வேறொரு ஸ்திரீயையும் விவாகம் செய்துகொண்டார். இனி நான் போய் அவரோடு வாழ்வ தெங்ஙனம்?" கணவனோடு ஒத்துவாழ நினைக்கிற நங்கைக்கு அவளைத் தள்ளிவிடக் கருதும் நாயகனும், ஒற்றுமையற்று ஓயாச் சச்சரவிடும் கள்ளிக்கு அவளோடு சேர்ந்து வாழ எண்ணும் கணவனும் அமைவது வெகு விசித்திரமே!

ஃ

**பாபு சுபாஷ் சந்திர போஸின் கடிதம்:**—சிறையிலிருந்தும் எழுதிய இவ்வங்கதேசத் தலைவரின் கடித சாரமாவது:—(1) நல்லது கெட்டது என்பவை இரண்டும் நெருங்கிய சம்பந்த முடையவை. (2) ஒரு கொள்கை அல்லது லக்ஷியத்துக்காகவே வாழ்ந்து வரும் வரையில் அதற்கு மதிப்புண்டு. (3) ஒருவருடைய உணர்ச்சி, எண்ணம் எல்லாவற்றையும் ஒரே காரியத்தில் ஈடுபடுத்துவது சாமான்யமான விஷயமில்லை. சாதனம் தொடர்ச்சியாகச் செய்யவேண்டும். சில சமயங்களில் ஆயுள்காலம் முழுவதும் அதைச் செய்யவேண்டி யிருக்கலாம். (4) ஸத்யவழி நடக்க ஒருவர் தைரியசாலியாக இருக்கவேண்டும். எத்தனை கஷ்டங்களையும் ஏற்றுக்கொள்ளச் சித்தமாக இருக்கவேண்டும். (5) நண்பர்கள் உங்களுக்கு உதவி செய்யலாம். ஆனால், முயற்சி உங்களுடையதாகவே இருக்கவேண்டும்.

ஃ

**ஆகாய விமானயாத்திரை:**-மோட்டார் வாங்குவதைவிட, உலகின் எந்த பாகத்துக்கும் செல்லக் கூடிய இலேசான ஆகாய விமானம் ஒன்றைப் பதினாயிரம் ரூபாய்க்கு வாங்கி விடுவது எவ்வளவோ மேல் என்று ஒருவர் தெரிவிக்கிறார். டில்லியிலிருந்து கல்

கத்தாவுக்குப் புறப்பட 900—மைல் கடப்பதற்கு மோட்டாரானல் 3-தினங்கள் செல்லும். 20—மைலுக்கு ஒரு காலன் வீதம் 45-காலன் பெட்ரோல் எண்ணெய்வேண்டும். தரை வழியில் எவ்வளவோ இடங்களில் முட்டி மோதிக்கொள்ள நேரும். ஆகாய விமானத்திலோ மணிக்கு 100-மைல் வீதம் 9-மணி நேரத்தில் 900-மைல்களையும் கடந்து விடலாம். மணிக்கு 5-காலன் வீதம் 45-காலன் பெட்ரோல்தான் வேண்டியிருக்குமாம். எல்லாம் சரிதான்; இதற்கென்று கொட்டுகிற பணம் யாரிடம் போய்ச் சேருகிறதென்பது கேள்வி?

ஃ

**ஆசிரியர் ஸ்ரீ-ரங்கநாதனின் பிரசங்கம்:**—இவர் அண்ணாமலை ஸர்வ கலாசாலையின் உப அத்யட்சகர். இவரது பிரஸங்கத்தில் இரண்டு குறிப்புகளை இங்கு தருகிறோம். (1) மேனாடுகளில் தொழில்களிலும், வியாபாரக் கப்பல்களிலும், ராணுவத்திலும், கடற்படையிலும், தேச நிர்வாக வர்க்கங்களிலும் வித்தியா பட்டதாரிகள் புகுந்து உத்தியோகம் செய்து ஜீவிக்க வசதிகளிருப்பதுபோல், இந்தியாவில் இல்லாத காரணத்தால்தான் சர்க்கார் உத்தியோகங்களையே நாடி, அவற்றைப் பெறப் போட்டி பலமாக இருக்கிறது. (2) இந்தியாவில் நடை பெறும் ராஜீயப் போராட்டம் இத்தேசத்தினுடையவும், ஸர்வ கலாசாலை மாணவர்களுடையவும் பிற்கால வாழ்வை நிர்ணயித்து விடச் சக்தி பெற்றதா யிருக்கையில், அதில் சேர்ந்து எவ்விதப் பங்கும் மாணவர்கள் எடுத்துக்கொள்ளக் கூடாதென்று சொல்வது—அவர்களுடைய பிற்கால வாழ்வு எப்படிப்பட்டதாக யிருக்குமென்று நிர்ணயிக்க அவர்களுக்கு உரிமை இல்லை என்று கூறுவது போலவே ஆகும்.

ஃ

**நாகஸர்ப்பக் காவடி:**—திருச்செந்தூர் சுப்பிரமணியக் கடவுள் ஒரு வரது கனவில் நாகஸர்ப்பக் காவடி எடுக்கும்படி தெரிவித்து, நாகம் கிடைக்கு மிடமும் குறிப்பிட, அவ்விதமே பெருங்குளம் கிராமத்து ஆல மரத்தருகில் செல்ல, அங்கு ஒரு நாகமும் தென்பட, அதைப் பக்தியுடன் கையாற் பிடித்து செம்பிற் குள்ளிட்டு மூடிக் காவடியில் வைத்து எடுத்துக் கொண்டு வந்து முருகப் பெருமானைச் சேவித்து செம்பின்மேலிருந்த துணியை நீக்கவும், உடனே நாகம் வெளிப்பட்டு கோபுரத்தின் மேல் ஏறி மறைந்து விட்டதாம். எதிலுமே நம்பியவர்கட்குத் தான் வாழ்வு. கடவுளின் மகிமையை யாரே அறிய வல்லார்?

ஃ

**மற்றொரு நாகம்:**—சங்கரன் கோவில்தாலுக்கா நாலாந்துலா என்ற கிராமத்தில் மாடசாமி கோவிலில் ஒரு நாகம் காணப்பட்டு அது படம் எடுத்தாடியதாம். பூசாரி ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்யும் பொழுது அந்த ஜலம் பாம்பின் மீது பட்டும் அது ஏதும் செய்யவில்லை. அநேக ஜனங்கள் வந்து பார்த்தனர். ஒருவர் மீது ஆவேசம் உண்டாகி கோயிலுள்ள ஸ்வாமியே ஸர்ப்ப உருவாய் வந்ததாகக் கூறினர். இரவு 12-மணிக்குப் பிறகு ஸர்ப்பமும் மறைந்து விட்டதாம். யாவும் ஈஸ்வர லீலை.

---

**தங்கம் விற்கும் செட்டியார்:**—கம்பளியின் மீது வீற்றுள்ள இவரது வாய் சமர்த்தும், பணத்தை வாங்குவதிலுள்ள கருத்தும், அவரது கெட்டிக்காரத்தனமும் அருகிலிருந்து பார்ப்போருக்கு ஒரு நேர்த்தியான நாடகக் காட்சியாக இருக்கும்!

# “ அமிர்த குணபோதினி ”

## ஆங்கீரஸ வருஷத்திய ஆனி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங்கி | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | குன்யர்க்கம், கஞ்சாலதாரம், கரிநாள் தசமி அசுபம். |
| சி | 14 | 1 | செவ் | தச-9-50, சித்-36-45, மிதுனரவி 1-0, ஷடசீதி, |
| சி | 15 | 2 | புதன் | ஏகா-2-45, உப-52-10, ஸ்வா-31-17, ஸர்வ-நிர்ஜல |
| | | | | [ஏகாதசி ராமலக்ஷ்மண த்வாதசி. |
| சி | 16 | 3 | வியா | திர-46-44, விசா-25-19, பிரதோஷம் கூர்மஜயந்தி. |
| | | | | [ஜ்யேஷ்டாபிஷேகம். |
| சி-ம | 17 | 4 | வெள் | சதி-38-18, அநு-19-14, கோயம்பேடு கருடன். |
| சி | 18 | ஜூன் (5-28) 5 | சனி | ○-31-1, கேட்-13-24, ரிஷபபூஜா மன்னார்குடி தெ |
| | | | | ப்பம். [திதித்வயம் களத்தூர் ரதம். |
| அ-சி | 19 | 6 | ஞா | பிர-24-14, மூல-8-16, ஜ்யேஷ்டபகுளம் கரிநாள் |
| உ-ம | 20 | 7 | திங் | த்வி-18-39, பூரா-4-15 |
| பி-சி | 21 | 8 | செவ் | திரி-14-39, உரா-1-46, |
| | | | | கடகாயனம் 37-51. |
| சி-பி | 22 | 9 | புதன் | சது-12-34, ச்ரவ-1-8. |
| சி-ம | 23 | 10 | வியா | பஞ்-12-34, அவி-2-34. |
| சி | 24 | 11 | வெள் | ஷஷ்-14-35, சத-6-0. |
| ம-சி | 25 | 12 | சனி | ஸப்-18-24, பூட்-11-14, திரிலோசன பூஜாஸப்தமி |
| அ | 26 | 13 | ஞா | அஷ்-23-33, உட்-17-48, அதிதி. [அசுபம். |
| சி | 27 | 14 | திங் | நவ-29-33, ரே-25-11, நவமிதிதி. |
| சி | 28 | 15 | செவ் | தச-35-42, அசு-32-49, தசமி அசுபம். |
| சி-அ | 29 | 16 | புதன் | ஏகா-41-32, பர-40-6, ஸர்வைகாதசி. |
| ம-உ | 30 | 17 | வியா | த்வா-46-36, கிரு-46-40, கிருத்திகாவிரதம். |
| ம-சி | 1 | 18 | வெள் | திர-50-36, ரோ-52-13, பிரதோஷம். |
| சி | 2 | 19 | சனி | சதி-53-20, மிரு-56-33, சிவராத்திரி. |
| சி | 3 | 20 | ஞா | ●-54-56, ஆரு-59-43, ஆனி அமாவாசை திருவள் |
| அ | 4 | 21 | திங் | பிர-55-20, புந-60-0, ஆஷாடசுத்தம். [ளூர்தெப்பம் |
| சி | ஜூலை 5 | 22 | செவ் | த்வி-54-45, புந-1-47, ராமரதம், ரதயாத்ரா த்விதி. |
| சி | 6 | 23 | புதன் | திரி-53-10, பூச-2-49, ரப்பூலவல்லீ 1உ |
| சி-அ | 7 | 24 | வியா | சது-50-48, ஆயி-3-0. [ரம் கருடன் ஸ்கந்தபஞ்சமி. |
| ம-சி | 8 | 25 | வெள் | பஞ்-47-43, மக-2-23, அமிர்தலக்ஷ்மிவிரதம், சிவ |
| சி | 9 | 26 | சனி | ஷஷ்-43-49, பூர-1-1, உப-57-54, ஷஷ்டிவிரதம், |
| உ-ம | | | | [கூர்மஷஷ்டி ஆனித்திருமஞ்சனம். |
| அ-சி | 10 | 27 | ஞா | ஸப்-39-16, ஹஸ்-56-7, மித்ரவைவஸ்வத ஸப்தமி. |
| பி-அ | 11 | 28 | திங் | அஷ்-34-4, சித்-52-40, திருவள்ளூர் ஜ்யேஷ்டாபி |
| | | | | ஷேகம். [லக்ஷ்மிவிரத மாரம்பம். |
| சி-ம | 12 | 29 | செவ் | நவ-28-16, ஸ்வா-48-40, சாகவிரதம், ஆனிகருடன், |
| சி-அ | 13 | 30 | புதன் | தச-22-2, விசா-44-16, திதித்வயம், ஸ்ரீமுஷ்ணம் |
| | | | | ஜ்யேஷ்டாபிஷேகம். [தசி, கோபத்மவிரதம். |
| சி-பி | 14 | 31 | வியா | ஏகா-15-30, அநு-39-39, ஸர்வ ஜீவவார சயன ஏகா |

| | | | |
|---|---|---|---|
| | | குஜ | பு-ரவி சுக் |
| ரா சனி | 15உக்கு ராசி | | குரு கே |
| | | | |

“அமிர்த குணபோதினி” பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932.